# பரிசுத்த வேதாகமம் O.V. (BSI)
# (TAMILOV-BSI)
# (Translated from KJV)

# VS

# திருவிவிலியம்(கத்தோலிக்க திருவிவிலியம் - பொது மொழிபெயர்ப்பு)
# Tamil Bible: Ecumenical Tamil Translation - ETB)

**New Testament of our LORD JESUS CHRIST**

For we are not as many, which corrupt the word of God: but as of sincerity, but as of God, in the sight of God speak we in Christ.

2 Corinthians 2:17

Project by PROCLAIM JEHOVAH

**Gospel summary of human redemption by our LORD and SAVIOR JESUS CHRIST**

Genesis:3 :1,4,14-15,17-19

1 தேவனாகிய கர்த்தர் உண்டாக்கின சகல காட்டு ஜீவன்களைப்பார்க்கிலும் சர்ப்பமானது தந்திரமுள்ளதாயிருந்தது. அது ஸ்திரீயை நோக்கி: நீங்கள் தோட்டத்திலுள்ள சகல விருட்சங்களின் கனியையும் புசிக்கவேண்டாம் என்று தேவன் சொன்னது உண்டோ என்றது

4 அப்பொழுது சர்ப்பம் ஸ்திரீயை நோக்கி: நீங்கள் சாகவே சாவதில்லை;

14 அப்பொழுது தேவனாகிய கர்த்தர் சர்ப்பத்தைப் பார்த்து: நீ இதைச் செய்தபடியால் சகல நாட்டு மிருகங்களிலும் சகல காட்டு மிருகங்களிலும் சபிக்கப்பட்டிருப்பாய், நீ உன் வயிற்றினால் நகர்ந்து, உயிரோடிருக்கும் நாளெல்லாம் மண்ணைத் தின்பாய்;

15 **உனக்கும் ஸ்திரீக்கும், உன் வித்துக்கும் அவள் வித்துக்கும் பகை உண்டாக்குவேன்; அவர் உன் தலையை நசுக்குவார், நீ அவர் குதிங்காலை நசுக்குவாய் என்றார்.**

17 பின்பு அவர் ஆதாமை நோக்கி: நீ உன் மனைவியின் வார்த்தைக்குச் செவிகொடுத்து, புசிக்கவேண்டாம் என்று நான் உனக்கு விலக்கின விருட்சத்தின் கனியைப் புசித்தபடியினாலே, பூமி உன் நிமித்தம் சபிக்கப்பட்டிருக்கும்; நீ உயிரோடிருக்கும் நாளெல்லாம் வருத்

தத்தோடே அதின் பலனைப் புசிப்பாய்.

18 அது உனக்கு முள்ளும் குருக்கும் முளைப்பிக்கும்; வெளியின் பயிர்வகைகளைப் புசிப்பாய்.

19 நீ பூமியிலிருந்து எடுக்கப்பட்டபடியால், நீ பூமிக்குத் திரும்புமட்டும் உன் முகத்தின் வேர்வையால் ஆகாரம் புசிப்பாய்; நீ மண்ணாயிருக்கிறாய், மண்ணுக்குத் திரும்புவாய் என்றார்.

Matthew 13:4,19

4 அவன் விதைக்கையில், சில விதை வழியருகே விழுந்தது; பறவைகள் வந்து அதைப் பட்சித்துப்போட்டது.

19 ஒருவன், ராஜ்யத்தின் வசனத்தைக் கேட்டும் உணராதிருக்கும்போது, பொல்லாங்கன் வந்து, அவன் இருதயத்தில் விதைக்கப்பட்டதைப் பறித்துக்கொள்ளுகிறான்; அவனே வழியருகே விதைக்கப்பட்டவன்.

Luke 8:11-12

11 அந்த உவமையின் கருத்தாவது: விதை தேவனுடைய வசனம்.

12 வழியருகே விதைக்கப்பட்டவர்கள் வசனத்தைக் கேட்கிறவர்களாயிருக்கிறார்கள்; அவர்கள் விசுவாசித்து இரட்சிக்கப்படாதபடிக்குப் பிசாசானவன் வந்து, அவ்வசனத்தை அவர்கள் இருதயத்திலிருந்து எடுத்துப்போடுகிறான்.

Matthew 13:24-30,36-43

வேறொரு உவமையை அவர்களுக்குச் சொன்னார்: பரலோகராஜ்யம் தன் நிலத்தில் நல்ல விதையை விதைத்த மனுஷனுக்கு ஒப்பாயிருக்கிறது.

25 மனுஷர் நித்திரைபண்ணுகையில் அவனுடைய சத்துரு வந்து, கோதுமைக்குள் களைகளை விதைத்துவிட்டுப்போனான்.

26 பயிரானது வளர்ந்து கதிர்விட்டபோது, களைகளும் காணப்பட்டது.

27 வீட்டெஜமானுடைய வேலைக்காரர் அவனிடத்தில் வந்து: ஆண்டவனே, நீர் உமது நிலத்தில் நல்ல விதையை விதைத்தீர் அல்லவா? பின்னை அதில் களைகள் எப்படி உண்டானது என்றார்கள்.

28 அதற்கு அவன்: சத்துரு அதைச் செய்தான் என்றான். அப்பொழுது வேலைக்காரர்: நாங்கள் போய் அவைகளைப் பிடுங்கிப்போட உமக்குச் சித்தமா? என்று கேட்டார்கள்.

29 அதற்கு அவன்: வேண்டாம், களைகளைப் பிடுங்கும்போது நீங்கள் கோதுமையையுங்கூட வேரோடே பிடுங்காதபடிக்கு, இரண்டையும் அறுப்புமட்டும் வளரவிடுங்கள்.

30 அறுப்புக்காலத்தில் நான் அறுக்கிறவர்களை நோக்கி: முதலாவது, களைகளைப் பிடுங்கி, அவைகளைச் சுட்டெரிக்கிறதற்குக் கட்டுகளாகக் கட்டுங்கள்; கோதுமையையோ என் களஞ்சியத்தில் சேர்த்துவையுங்கள் என்பேன் என்று சொன்னான் என்றார்.

36 அப்பொழுது இயேசு ஜனங்களை அனுப்பிவிட்டு வீட்டுக்குப் போனார். அவருடைய சீஷர்கள் அவரிடத்தில் வந்து: நிலத்தின் களைகளைப்பற்றிய உவமையை எங்களுக்கு வெளிப்படுத்தவேண்டுமென்று கேட்டார்கள்.

37 அவர் பிரதியுத்தரமாக: நல்ல விதையை விதைக்கிறவன் மனுஷகுமாரன்;

38 நிலம் உலகம்; நல்ல விதை ராஜ்யத்தின் புத்திரர்; களைகள் பொல்லாங்கனுடைய புத்திரர்;

39 அவைகளை விதைக்கிற சத்துரு பிசாசு; அறுப்பு உலகத்தின் முடிவு; அறுக்கிறவர்கள் தேவதூதர்கள்.

40 ஆதலால், களைகளைச்சேர்த்து அக்கினியால் சுட்டெரிக்கிறதுபோல, இவ்வுலகத்தின் முடிவிலே நடக்கும்.

41 மனுஷகுமாரன் தம்முடைய தூதர்களை அனுப்புவார்; அவர்கள் அவருடைய ராஜ்யத்தில் இருக்கிற சகல இடறல்களையும் அக்கிரமஞ்செய்கிறவர்களையும் சேர்த்து,

42 அவர்களை அக்கினிச் சூளையிலே போடுவார்கள்; அங்கே அழுகையும் பற்கடிப்பும் உண்டாயிருக்கும்.

43 அப்பொழுது, நீதிமான்கள் தங்கள் பிதாவின் ராஜ்யத்திலே சூரியனைப்போலப் பிரகாசிப்பார்கள். கேட்கிறதற்குக் காதுள்ளவன் கேட்கக்கடவன்

John 3:13-19

13 பரலோகத்திலிருந்திறங்கினவரும் பரலோகத்திலிருக்கிறவருமான மனுஷகுமாரனேயல்லாமல் பரலோகத்துக்கு ஏறினவன் ஒருவனுமில்லை.

14 சர்ப்பமானது மோசேயினால் வனாந்தரத்திலே உயர்த்தப்பட்டதுபோல மனுஷகுமாரனும்,

15 தன்னை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப்போகாமல் நித்தியஜீவனை அடையும்படிக்கு, உயர்த்தப்படவேண்டும்.

16 **தேவன், தம்முடைய ஒரேபேறான குமாரனை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப்போகாமல் நித்தியஜீவனை அடையும்படிக்கு, அவரைத் தந்தருளி, இவ்வளவாய் உலகத்தில் அன்பு கூர்ந்தார்.**

17 உலகத்தை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கும்படி தேவன் தம்முடைய குமாரனை உலகத்தில் அனுப்பாமல், அவராலே உலகம் இரட்சிக்கப்படுவதற்காகவே அவரை அனுப்பினார்.

18 அவரை விசுவாசிக்கிறவன் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படான்; விசுவாசியாதவனோ, தேவனுடைய ஒரேபேறான குமாரனுடைய நாமத்தில் விசுவாசமுள்ளவனாயிராதபடியினால், அவன் ஆக்கினைத் தீர்ப்புக்குட்பட்டாயிற்று.

19 ஒளியானது உலகத்திலே வந்திருந்தும் மனுஷருடைய கிரியைகள் பொல்லாதவைகளாய் இருக்கிறபடியினால் அவர்கள் ஒளியைப்பார்க்கிலும் இருளை விரும்புகிறதே அந்த ஆக்கினைத்தீர்ப்புக்குக் காரணமாயிருக்கிறது

John 8:44-47

44 நீங்கள் உங்கள் பிதாவாகிய பிசாசானவனால் உண்டானவர்கள்; உங்கள் பிதாவினுடைய இச்சைகளின்படி செய்ய மனதாயிருக்கிறீர்கள்; அவன் ஆதிமுதற்கொண்டு மனுஷகொலைபாதகனாயிருக்கிறான்; சத்தியம் அவனிடத்திலில்லாதபடியால் அவன் சத்தியத்திலே நிலைநிற்கவில்லை; அவன் பொய்யனும் பொய்க்குப்பிதாவுமாயிருக்கிறபடியால் அவன் பொய்பேசும்போது தன் சொந்தத்தில் எடுத்துப் பேசுகிறான்.

45 நான் உங்களுக்குச் சத்தியத்தைச் சொல்லுகிறபடியினாலே நீங்கள் என்னை விசுவாசிக்கிறதில்லை.

46 என்னிடத்தில் பாவம் உண்டென்று உங்களில் யார் என்னைக் குற்றப்படுத்தக்கூடும்? நான் சத்தியத்தைச் சொல்லியிருக்க, நீங்கள் ஏன் என்னை விசுவாசிக்கிறதில்லை.

47 தேவனால் உண்டானவன் தேவனுடைய வசனங்களுக்குச் செவிகொடுக்கிறான்; நீங்கள் தேவனால் உண்டாயிராதபடியினால் செவிகொடாமலிருக்கிறீர்கள் என்றார்.

## 2 Corinthians 11:13-15

13 அப்படிப்பட்டவர்கள் கள்ள அப்போஸ்தலர்கள், கபடமுள்ள வேலையாட்கள், கிறிஸ்துவினுடைய அப்போஸ்தலரின் வேஷத்தைத் தரித்துக்கொண்டவர்களாயிருக்கிறார்கள்.

14 அது ஆச்சரியமல்ல, சாத்தானும் ஒளியின் தூதனுடைய வேஷத்தைத் தரித்துக்கொள்வானே.

15 ஆகையால் அவனுடைய ஊழியக்காரரும் நீதியின் ஊழியக்காரருடைய வேஷத்தைத் தரித்துக்கொண்டால் அது ஆச்சரியமல்லவே; அவர்கள் முடிவு அவர்கள் கிரியைகளுக்குத்தக்கதாயிருக்கும்

## Colossians 2:6-9

6 ஆகையால், நீங்கள் கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவை ஏற்றுக்கொண்டபடியே, அவருக்குள் வேர்கொண்டவர்களாகவும், அவர்மேல் கட்டப்பட்டவர்களாகவும், அவருக்குள் நடந்துகொண்டு,

7 நீங்கள் போதிக்கப்பட்டபடியே, விசுவாசத்தில் உறுதிப்பட்டு, ஸ்தோத்திரத்தோடே அதிலே பெருகுவீர்களாக.

8 லௌகிக ஞானத்தினாலும், மாயமான தந்திரத்தினாலும், ஒருவனும் உங்களைக் கொள்ளைகொண்டு போகாதபடிக்கு எச்சரிக்கையாயிருங்கள்; அது மனுஷர்களின் பாரம்பரிய நியாயத்தையும் உலகவழிபாடுகளையும் பற்றினதேயல்லாமல் கிறிஸ்துவைப்பற்றினதல்ல.

9 ஏனென்றால், தேவத்துவத்தின் பரிபூரணமெல்லாம் சரீரப்பிரகாரமாக அவருக்குள் வாசமாயிருக்கிறது.

## 1 Timothy 6:20-21

20 ஓ தீமோத்தேயுவே, உன்னிடத்தில் ஒப்புவிக்கப்பட்டதை நீ காத்துக்கொண்டு, சீர்கேடான வீண்பேச்சுகளுக்கும், ஞானமென்று பொய்யாய்ப் பேர்பெற்றிருக்கிற கொள்கையின் விபரீதங்களுக்கும் விலகு.

21 சிலர் அதைப் பாராட்டி, விசுவாசத்தைவிட்டு வழுவிப்போனார்கள். கிருபையானது உன்னோடேகூட இருப்பதாக. ஆமென்.

Revelation 12:9-12,17

9 உலகமனைத்தையும் மோசம்போக்குகிற பிசாசு என்றும் சாத்தான் என்றும் சொல்லப்பட்ட பழைய பாம்பாகிய பெரிய வலுசர்ப்பம் தள்ளப்பட்டது; அது பூமியிலே விழத்தள்ளப்பட்டது, அதனோடேகூட அதைச் சேர்ந்த தூதரும் தள்ளப்பட்டார்கள்.

10 **அப்பொழுது வானத்திலே ஒரு பெரிய சத்தமுண்டாகி: இப்பொழுது இரட்சிப்பும் வல்லமையும் நமது தேவனுடைய ராஜ்யமும், அவருடைய கிறிஸ்துவின் அதிகாரமும் உண்டாயிருக்கிறது;** இரவும் பகலும் நம்முடைய தேவனுக்கு முன்பாக நம்முடைய சகோதரர்மேல் குற்றஞ்சுமத்தும்பொருட்டு அவர்கள்மேல் குற்றஞ்சாட்டுகிறவன் தாழத்தள்ளப்பட்டுப்போனான்.

11 மரணம் நேரிடுகிறதாயிருந்தாலும் அதற்குத் தப்பும்படி தங்கள் ஜீவனையும் பாராமல், **ஆட்டுக்குட்டியின் இரத்தத்தினாலும் தங்கள் சாட்சியின் வசனத்தினாலும் அவனை ஜெயித்தார்கள்.**

**12 ஆகையால் பரலோகங்களே! அவைகளில் வாசமாயிருக்கிறவர்களே! களிகூருங்கள்.** பூமியிலும் சமுத்திரத்திலும் குடியிருக்கிறவர்களே! ஐயோ, பிசாசானவன் தனக்குக் கொஞ்சக்காலமாத்திரம் உண்டென்று அறிந்து, மிகுந்த கோபங்கொண்டு, உங்களிடத்தில் இறங்கினபடியால், உங்களுக்கு ஆபத்துவரும் என்று சொல்லக்கேட்டேன்.

17 அப்பொழுது வலுசர்ப்பமானது ஸ்திரீயின்மேல் கோபங்கொண்டு, தேவனுடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறவர்களும், இயேசுகிறிஸ்துவைக்குறித்துச் சாட்சியை உடையவர்களுமாகிய அவளுடைய சந்ததியான மற்றவர்களுடனே யுத்தம்பண்ணப்போயிற்று.

Revelation 20:1-2, 9-15

1 ஒரு தூதன் பாதாளத்தின் திறவுகோலையும் பெரிய சங்கிலியையும் தன் கையிலே பிடித்துக்கொண்டு வானத்திலிருந்திறங்கிவரக்கண்டேன்.

2 **பிசாசென்றும் சாத்தானென்றும் சொல்லப்பட்ட பழைய பாம்பாகிய வலுசர்ப்பத்தை அவன் பிடித்து, அதை ஆயிரம் வருஷமளவுங்கட்டிவைத்து, அந்த ஆயிரம் வருஷம் நிறைவேறும்வரைக்கும் அது ஜனங்களை மோசம்போக்காதபடிக்கு அதைப் பாதாளத்திலே தள்ளியடைத்து, அதின்மேல் முத்திரைபோட்டான்.**

9 அவர்கள் பூமியெங்கும் பரம்பி, பரிசுத்தவான்களுடைய பாளையத்தையும், பிரியமான நகரத்தையும் வளைந்துகொண்டார்கள்; அப்பொழுது தேவனால் வானத்திலிருந்து அக்கினி இறங்கி அவர்களைப் பட்சித்துப்போட்டது.

10 மேலும் அவர்களை மோசம்போக்கின பிசாசானவன், மிருகமும் கள்ளத்தீர்க்கதரிசியுமிருக்கிற இடமாகிய அக்கினியும் கந்தகமுமான கடலிலே தள்ளப்பட்டான். அவர்கள் இரவும் பகலும் சதாகாலங்களிலும் வாதிக்கப்படுவார்கள்.

11 பின்பு, நான் பெரிய வெள்ளைச் சிங்காசனத்தையும் அதின்மேல் வீற்றிருக்கிறவரையும் கண்டேன்; அவருடைய சமுகத்திலிருந்து பூமியும் வானமும் அகன்றுபோயின; அவைகளுக்கு இடங்காணப்படவில்லை.

12 **மரித்தோராகிய சிறியோரையும் பெரியோரையும் தேவனுக்குமுன்பாக நிற்கக்கண்டேன்; அப்பொழுது புஸ்தகங்கள் திறக்கப்பட்டன; ஜீவபுஸ்தகம் என்னும் வேறொரு புஸ்தகமும் திறக்கப்பட்டது; அப்பொழுது அந்தப் புஸ்தகங்களில் எழுதப்பட்டவைகளின்படியே மரித்தோர் தங்கள் தங்கள் கிரியைகளுக்குத்தக்கதாக நியாயத்தீர்ப்படைந்தார்கள்.**

13 சமுத்திரம் தன்னிலுள்ள மரித்தோரை ஒப்புவித்தது; மரணமும் பாதாளமும் தங்களிலுள்ள மரித்தோரை ஒப்புவித்தன. யாவரும் தங்கள் தங்கள் கிரியைகளின்படியே நியாயத்தீர்ப்படைந்தார்கள்.

14 அப்பொழுது மரணமும் பாதாளமும் அக்கினிக்கடலிலே தள்ளப்பட்டன. இது இரண்டாம் மரணம்.

15 ஜீவபுஸ்தகத்திலே எழுதப்பட்டவனாகக் காணப்படாதவனெவனோ அவன் அக்கினிக்கடலிலே தள்ளப்பட்டான்.

## Revelation 21:1-7

1 பின்பு, நான் புதிய வானத்தையும் புதிய பூமியையும் கண்டேன்; முந்தின வானமும் முந்தின பூமியும் ஒழிந்துபோயின; சமுத்திரமும் இல்லாமற்போயிற்று.

2 யோவானாகிய நான், புதிய எருசலேமாகிய பரிசுத்த நகரத்தை தேவனிடத்தினின்று பரலோகத்தைவிட்டு இறங்கி வரக்கண்டேன்; அது தன் புருஷனுக்காக அலங்கரிக்கப்பட்ட மணவாட்டியைப் போல ஆயத்தமாக்கப்பட்டிருந்தது.

3 மேலும், பரலோகத்திலிருந்து உண்டான ஒரு பெருஞ்சத்தத்தைக் கேட்டேன்; அது: **இதோ, மனுஷர்களிடத்திலே தேவனுடைய வாசஸ்தலமிருக்கிறது, அவர்களிடத்திலே அவர் வாசமாயிருப்பார்; அவர்களும் அவருடைய ஜனங்களாயிருப்பார்கள், தேவன்தாமே அவர்களோடேகூட இருந்து அவர்களுடைய தேவனாயிருப்பார்.**

4 அவர்களுடைய கண்ணீர் யாவையும் தேவன் துடைப்பார்; இனி மரணமுமில்லை, துக்கமுமில்லை, அலறுதலுமில்லை, வருத்தமுமில்லை; முந்தினவைகள் ஒழிந்துபோயின என்று விளம்பினது.

5 சிங்காசனத்தின்மேல் வீற்றிருந்தவர்: இதோ, நான் சகலத்தையும் புதிதாக்குகிறேன் என்றார். பின்னும் அவர்: இந்த வசனங்கள் சத்தியமும் உண்மையுமானவைகள், இவைகளை எழுது என்றார்.

6 அன்றியும், அவர் என்னை நோக்கி: ஆயிற்று, நான் அல்பாவும், ஓமெகாவும், ஆதியும் அந்தமுமாயிருக்கிறேன். தாகமாயிருக்கிறவனுக்கு நான் ஜீவத்தண்ணீரூற்றில் இலவசமாய்க் கொடுப்பேன்.

7 ஜெயங்கொள்ளுகிறவன் எல்லாவற்றையும் சுதந்தரித்துக்கொள்ளுவான்; நான் அவன் தேவனாயிருப்பேன், அவன் என் குமாரனாயிருப்பான்.

## Revelation 22:1-7

பின்பு, பளிங்கைப்போல் தெளிவான ஜீவத்தண்ணீருள்ள சுத்தமான நதி தேவனும் ஆட்டுக்குட்டியானவரும் இருக்கிற சிங்காசனத்திலிருந்து புறப்பட்டுவருகிறதை எனக்குக் காண்பித்தான்.

2 நகரத்து வீதியின் மத்தியிலும், நதியின் இருகரையிலும், பன்னிரண்டு விதமான கனிகளைத்தரும் ஜீவவிருட்சம் இருந்தது, அது மாதந்தோறும் தன் கனியைக் கொடுக்கும்; அந்த விருட்சத்தின் இலைகள் ஜனங்கள் ஆரோக்கியமடைகிறதற்கு ஏதுவானவைகள்.

3 இனி ஒரு சாபமுமிராது. தேவனும் ஆட்டுக்குட்டியானவரும் இருக்கிற சிங்காசனம் அதிலிருக்கும்.

4 அவருடைய ஊழியக்காரர் அவரைச் சேவித்து, அவருடைய சமுகத்தைத் தரிசிப்பார்கள்; அவருடைய நாமம் அவர்களுடைய நெற்றிகளில் இருக்கும்.

5 அங்கே இராக்காலமிராது; விளக்கும் சூரியனுடைய வெளிச்சமும் அவர்களுக்கு வேண்டுவதில்லை; தேவனாகிய கர்த்தரே அவர்கள்மேல் பிரகாசிப்பார். அவர்கள் சதாகாலங்களிலும் அரசாளுவார்கள்.

**6 பின்பு, அவர் என்னை நோக்கி: இந்த வசனங்கள் உண்மையும் சத்தியமுமானவைகள், சீக்கிரமாய்ச் சம்பவிக்கவேண்டியவைகளைத் தம்முடைய ஊழியக்காரருக்குக் காண்பிக்கும்பொருட்டு, பரிசுத்த தீர்க்கதரிசிகளின் கர்த்தராகிய தேவனானவர் தம்முடைய தூதனை அனுப்பினார்.**

**7 இதோ, சீக்கிரமாய் வருகிறேன்; இந்தப் புஸ்தகத்திலுள்ள தீர்க்கதரிசன வசனங்களைக் கைக்கொள்ளுகிறவன் பாக்கியவான் என்றார்.**

| S.No | VERSES (CHANGED OR REMOVED FROM ORIGINAL KJV) | பரிசுத்த வேதாகமம் O.V. (BSI) (TAMILOV-BSI) | திருவிவிலியம்(கத்தோலிக்க திருவிவிலியம் - பொது மொழிபெயர்ப்பு) -Tamil Bible: Ecumenical Tamil Translation - ETB) Note:verses written in brackets is not found in main text,but in footnotes with astericks,implying doubtful source to create confusion) |
|---|---|---|---|
| 1 | Matthew 1:25<br><br>REMOVED ''Firstborn'' | அவள் தன் **முதற்பேறான குமாரனைப் பெறுமளவும்** அவளை அறியாதிருந்து, அவருக்கு இயேசு என்று பேரிட்டான். | மரியா **தம் மகனைப் பெற்றெடுக்கும்வரை** யோசேப்பு அவரோடு உறவு கொள்ளவில்லை. யோசேப்பு அம்மகனுக்கு இயேசு என்று பெயரிட்டார். |
| 2 | Matthew 5:22<br><br>REMOVED "without a cause" | நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்; **தன் சகோதரனை நியாயமில்லாமல் கோபித்துக்கொள்பவன்** நியாயத்தீர்ப்புக்கு ஏதுவாயிருப்பான்; தன் சகோதரனை வீணனென்று சொல்லுகிறவன் ஆலோசனைச் சங்கத்தீர்ப்புக்கு ஏதுவாயிருப்பான்; மூடனே என்று சொல்லுகிறவன் எரிநரகத்துக்கு ஏதுவாயிருப்பான். | ஆனால் நான் உங்களுக்குச் சொல்கிறேன்; **"தம் சகோதரர் சகோதரிகளிடம் சினங்கொள்கிறவர்** தண்டனைத் தீர்ப்புக்கு ஆளாவார்; தம் சகோதரரையோ சகோதரியையோ "முட்டாளே" என்பவர் தலைமைச் சங்கத் தீர்ப்புக்கு ஆளாவார்; "அறிவிலியே" என்பவர் எரிநரகத்துக்கு ஆளாவார். |
| 3 | Matthew 5:44 | நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்; உங்கள் | ஆனால் நான் உங்களுக்குச் சொல்கிறேன்; உங்கள் |

| | | | |
|---|---|---|---|
| | Removed 12 words ''bless tham that curse you....'' | சத்துருக்களைச் சிநேகியுங்கள்; **உங்களைச் சபிக்கிறவர்களை ஆசீர்வதியுங்கள்;** உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மை செய்யுங்கள்; உங்களை நிந்திக்கிறவர்களுக்காகவும் உங்களைத் துன்பப்படுத்துகிறவர்களுக்காக வும் ஜெபம்பண்ணுங்கள். | பகைவரிடமும் அன்பு கூருங்கள்; உங்களைத் துன்புறுத்துவோருக்காக இறைவனிடம் வேண்டுங்கள். |
| 4 | Matthew 6:13<br><br>REMOVED last 14 words ''For thine is the Kingdom.....'' | எங்களைச் சோதனைக்குட்படப்பண்ணாமல், தீமையினின்று எங்களை இரட்சித்துக்கொள்ளும், **ராஜ்யமும், வல்லமையும், மகிமையும் என்றென்றைக்கும் உம்முடையவைகளே, ஆமென், என்பதே.** | எங்களைச் சோதனைக்கு உட்படுத்தாதேயும், தீயோனிடமிருந்து எங்களை விடுவியும். ("ஆட்சியும் வல்லமையும் மாட்சியும் என்றென்றும் உமக்கே. ஆமென்.") |
| 5 | Matthew 6:27<br><br>CHANGED ''cubit to his stature'' TO ''hour to his life'' et.al. | கவலைப்படுகிறதினாலே உங்களில் எவன் தன் சரீர அளவோடு ஒரு முழத்தைக் கூட்டுவான்? | கவலைப் படுவதால் உங்களில் எவர் தமது உயரத்தோடு ஒரு முழம் கூட்ட முடியும்? |
| 6 | Matthew 6:33<br><br>REMOVED''of God'' | முதலாவது **தேவனுடைய ராஜ்யத்தையும்** அவருடைய நீதியையும் தேடுங்கள், அப்பொழுது இவைகளெல்லாம் உங்களுக்குக்கூடக் கொடுக்கப்படும். | ஆகவே அனைத்திற்கும் மேலாக **அவரது ஆட்சியையும்** அவருக்கு ஏற்புடையவற்றையும் நாடுங்கள். அப்போது இவையனைத்தும் உங்களுக்குச் சேர்த்துக் கொடுக்கப்படும். |
| 7 | Matthew 8:29 | **அவர்கள் அவரை நோக்கி:** | **அவர்கள், "இறை மகனே,** |

|  |  |  |  |
|---|---|---|---|
|  | REMOVED''Jesus'' | **இயேசுவே, தேவனுடைய குமாரனே,** எங்களுக்கும் உமக்கும் என்ன? காலம் வருமுன்னே எங்களை வேதனைப்படுத்த இங்கே வந்தீரோ என்று கூப்பிட்டார்கள். | உமக்கு இங்கு என்ன வேலை? குறித்த காலம் வரும்முன்னே எங்களை வதைக்கவா இங்கே வந்தீர்?" என்று கத்தினார்கள். |
| 8 | Matthew 9:13<br><br>REMOVED ''to repentance'' (see also Mark 2:17) | பலியையல்ல, இரக்கத்தையே விரும்புகிறேன் என்பதின் கருத்து இன்னதென்று போய்க் கற்றுக்கொள்ளுங்கள்; நீதிமான்களையல்ல, **பாவிகளையே மனந்திரும்புகிறதற்கு அழைக்கவந்தேன்** என்றார். | "பலியை அல்ல, இரக்கத்தையே விரும்புகிறேன்" என்பதன் கருத்தை நீங்கள் போய்க் கற்றுக் கொள்ளுங்கள்; ஏனெனில் நேர்மையாளரை அல்ல, **பாவிகளையே அழைக்க வந்தேன்"** என்றார். |
| 9 | Matthew 11:23<br><br>REMOVED ''hell'' | வானபரியந்தம் உயர்த்தப்பட்ட கப்பர்நகூமே, நீ பாதாளபரியந்தம் தாழ்த்தப்படுவாய்; உன்னில் செய்யப்பட்ட பலத்த செய்கைகள் சோதோமிலே செய்யப்பட்டிருந்ததானால், அது இந்நாள்வரைக்கும் நிலைத்திருக்கும். | கப்பர்நாகுமே, நீ வானளாவ உயர்த்தப்படுவாயோ? இல்லை, பாதாளம்வரை தாழ்த்தப்படுவாய். ஏனெனில் உன்னிடம் செய்யப்பட்ட வல்ல செயல்கள் சோதோமில் செய்யப்பட்டிருந்தால் அது இன்றுவரை நிலைத்திருக்குமே! |
| 10 | Matthew 12:6<br><br>REMOVED ''one greater TO something greater'' | **தேவாலயத்திலும் பெரியவர் இங்கே இருக்கிறார்** என்று உங்களுக்குச் சொல்லுகிறேன். | **ஆனால் கோவிலைவிடப் பெரியவர் இங்கே இருக்கிறார்** என நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். |
| 11 | Matthew 12:35 | **நல்ல மனுஷன் இருதயமாகிய நல்ல பொக்கிஷத்திலிருந்து** | **நல்லவர் நல்ல கருவ+லத்திலிருந்து** |

| | | | |
|---|---|---|---|
| | REMOVED ''of the heart'' | நல்லவைகளை எடுத்துக்காட்டுகிறான், பொல்லாத மனுஷன் பொல்லாத பொக்கிஷத்திலிருந்து பொல்லாதவைகளை எடுத்துக்காட்டுகிறான். | நல்லவற்றை வெளிக் கொணர்வர். தீயவரோ தீய கருவ+லத்திலிருந்து தீயவற்றையே வெளிக்கொணர்வர். |
| 12 | Matthew 12:40<br><br>CHANGED ''whale'' TO ''fish'' | யோனா இரவும் பகலும் மூன்றுநாள் ஒரு பெரிய மீனின் வயிற்றில் இருந்ததுபோல, மனுஷகுமாரனும் இரவும் பகலும் மூன்றுநாள் பூமியின் இருதயத்தில் இருப்பார். | யோனா மூன்று பகலும் மூன்று இரவும் ஒரு பெரிய மீனின் வயிற்றில் இருந்தார். அவ்வாறே மானிட மகனும் மூன்று பகலும் மூன்று இரவும் நிலத்தின் உள்ளே இருப்பார். |
| 13 | Matthew 12:47<br><br>REMOVED entire verse (esp previous edition of NIV,RSV in 1973,1978,1984).But 2011 edition seems to contain these,as seen here, as esp Internet Translation comparision become so common) | அப்பொழுது, ஒருவன் அவரை நோக்கி: உம்முடைய தாயாரும் உம்முடைய சகோதரரும் உம்மோடே பேசவேண்டுமென்று வெளியே நிற்கிறார்கள் என்றான். | ஒருவர் இயேசுவை நோக்கி, “அதோ, உம்தாயும் சகோதரர்களும் உம்மோடு பேச வேண்டும் என்று வெளியே நின்று கொண்டிருக்கின்றார்கள்” என்றார். |

| | | | |
|---|---|---|---|
| | Notice that the updated NIV 2011 is 38.8% different than the original NIV 1984... | | |
| 14 | Matthew 13:51<br><br>REMOVED ''Lord'' | பின்பு, இயேசு அவர்களை நோக்கி: இவைகளையெல்லாம் அறிந்துகொண்டீர்களா என்று கேட்டார். அதற்கு அவர்கள்: **ஆம், அறிந்துகொண்டோம், ஆண்டவரே,** என்றார்கள். | "இவற்றையெல்லாம் புரிந்து கொண்டீர்களா?" என்று இயேசு கேட்க, அவர்கள், **"ஆம்" என்றார்கள்.** |
| 15 | Matthew 15:8<br><br>REMOVED ''draweth nigh unto me with their mouth'' | இந்த ஜனங்கள் **தங்கள் வாயினால் என்னிடத்தில் சேர்ந்து,** தங்கள் உதடுகளினால் என்னைக் கனம்பண்ணுகிறார்கள்; அவர்கள் இருதயமோ எனக்குத் தூரமாய் விலகியிருக்கிறது; | அவர், "இம்மக்கள் உதட்டினால் என்னைப் போற்றுகின்றனர். இவர்கள் உள்ளமோ என்னைவிட்டு வெகு தொலையில் இருக்கிறது. |
| 16 | Matthew 16:3<br><br>REMOVED ''O ye hypocrites'' | உதயமாகிறபோது, செவ்வானமும் மந்தாரமுமாயிருக்கிறது, அதினால் இன்றைக்குக் காற்றும் மழையும் உண்டாகும் என்று சொல்லுகிறீர்கள். | காலை வேளையில், வானம் சிவந்து மந்தாரமாயிருந்தால், "இன்று காற்றுடன் கூடிய மழை இருக்கும்" என்பீர்கள். வானத்தின் தோற்றத்தைப் பகுத்துணர நீங்கள் அறிந்திருக்கிறீர்கள். ஆனால் |

|  |  |  |  |
|---|---|---|---|
|  |  | **மாயக்காரரே,** வானத்தின் தோற்றத்தை நிதானிக்க உங்களுக்குத் தெரியுமே, காலங்களின் அடையாளங்களை நிதானிக்க உங்களால் கூடாதா? | காலத்தின் அறிகுறிகளை அறிய உங்களால் முடியாதா? ") |
| 17 | Matthew 16:18<br><br>REMOVED ''hell'' | மேலும், நான் உனக்குச் சொல்லுகிறேன், நீ பேதுருவாய் இருக்கிறாய், இந்தக் கல்லின்மேல் என் சபையைக் கட்டுவேன்; பாதாளத்தின் வாசல்கள் அதை மேற்கொள்வதில்லை. | எனவே நான் உனக்குக் கூறுகிறேன்; உன் பெயர் பேதுரு; இந்தப் பாறையின்மேல் என் திருச்சபையைக் கட்டுவேன். பாதாளத்தின் வாயில்கள் அதன்மேல் வெற்றி கொள்ளா. |
| 18 | Matthew 16:20<br><br>REMOVED ''Jesus'' | அப்பொழுது, **தாம் கிறிஸ்துவாகிய இயேசு என்று ஒருவருக்கும்** சொல்லாதபடிக்குத் தம்முடைய சீஷர்களுக்குக் கட்டளையிட்டார். | பின்னர், **தாம் மெசியா என்பதை எவரிடமும்** சொல்லவேண்டாம் என்று இயேசு சீடரிடம் கண்டிப்பாய்க் கூறினார். |
| 19 | Matthew 17:21<br><br>REMOVED ENTIRE VERSE | **இந்த ஜாதிப் பிசாசு ஜெபத்தினாலும் உபவாசத்தினாலுமேயன்றி மற்றெவ்விதத்தினாலும் புறப்பட்டுப்போகாது என்றார்.** | ("இவ்வகைப் பேய் இறைவேண்டலினாலும் நோன்பினாலுமேயன்றி, வேறு எதனாலும் வெளியேறாது") என்றார். |
| 20 | Matthew 18:11<br><br>REMOVED ENTIRE VERSE (Key verse) | **மனுஷகுமாரன் கெட்டுப்போனதை இரட்சிக்க வந்தார்.** | (ஏனெனில் மானிட மகன் நெறிதவறியோரை மீட்கவே வந்தார், ") |

| 21 | Matthew 18:26<br><br>REMOVED ''and worshipped him(for Jesus)'' | அப்பொழுது, அந்த ஊழியக்காரன் **தாழவிழுந்து வணங்கி: ஆண்டவனே!** என்னிடத்தில் பொறுமையாயிரும், எல்லாவற்றையும் உமக்குக் கொடுத்துத் தீர்க்கிறேன் என்றான். | உடனே அப்பணியாள் **அவர் காலில் விழுந்து பணிந்து,** "என்னைப் பொறுத்தருள்க; எல்லாவற்றையும் உமக்குத் திருப்பித் தந்து விடுகிறேன்" என்றான். |
|---|---|---|---|
| 22 | Matthew 19:9<br><br>REMOVED LAST 11 WORDS | ஆதலால், எவனாகிலும் தன் மனைவி வேசித்தனஞ் செய்ததினிமித்தமேயன்றி, அவளைத் தள்ளிவிட்டு வேறொருத்தியை விவாகம்பண்ணினால், அவன் விபசாரஞ்செய்கிறவனாயிருப்பான்; **தள்ளிவிடப்பட்டவளை விவாகம்பண்ணுகிறவனும் விபசாரஞ்செய்கிறவனாயிருப்ப ான் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.** | பரத்தைமையில் ஈடுபட்டதற்காக அன்றி வேறு எக்காரணத்தையாவது முன்னிட்டுத் தன் மனைவியை விலக்கிவிட்டு வேறொரு பெண்ணை மணப்பவன் எவனும் விபசாரம் செய்கிறான் என நான் உங்களுக்குச் சொல்கிறேன்"என்றார். |
| 23 | Matthew 19:17 CHANGED ''why callest thou me good?'' TO ''why do you ask me about what is good?'' REMOVED ''God'' | **அதற்கு அவர்: நீ என்னை நல்லவன் என்று சொல்வானேன்? தேவன் ஒருவர் தவிர நல்லவன் ஒருவனும் இல்லையே;** நீ ஜீவனில் பிரவேசிக்க விரும்பினால் கற்பனைகளைக் கைக்கொள் என்றார். | **இயேசு அவரிடம், "நன்மையைப்பற்றி என்னை ஏன் கேட்கிறீர்? நல்லவர் ஒருவரே.** நீர் வாழ்வடைய விரும்பினால் கட்டளைகளைக் கடைப்பிடியும்" என்றார். |

| 24 | Matthew 20:7<br><br>REMOVED ''and whatsoever is right that shall ye receive'' | அதற்கு அவர்கள்: ஒருவரும் எங்களுக்கு வேலையிடவில்லை என்றார்கள். அவன் அவர்களை நோக்கி: நீங்களும் திராட்சத்தோட்டத்துக்குப் போங்கள், **நியாயமானபடி கூலி பெற்றுக்கொள்வீர்கள் என்றான்.** | அவர்கள் அவரைப் பார்த்து, "எங்களை எவரும் வேலைக்கு அமர்த்தவில்லை" என்றார்கள். அவர் அவர்களிடம், "நீங்களும் என் திராட்சைத் தோட்டத்துக்குப் போங்கள்" என்றார். |
|---|---|---|---|
| 25 | Matthew 20:16<br><br>REMOVED ''for many be called ,but few chosen'' | இவ்விதமாக, பிந்தினோர் முந்தினோராயும், முந்தினோர் பிந்தினோராயும் இருப்பார்கள்; **அழைக்கப்பட்டவர்கள் அநேகர், தெரிந்துகொள்ளப்பட்டவர்களோ சிலர் என்றார்.** | இவ்வாறு கடைசியானோர் முதன்மையாவர். முதன்மையானோர் கடைசியாவர்" என்று இயேசு கூறினார். |
| 26 | Matthew 20:20<br><br>CHANGED ''worshipping him'' TO ''kneeling down'' | அப்பொழுது, செபெதேயுவின் குமாரருடைய தாய் தன் குமாரரோடுகூட **அவரிடத்தில் வந்து, அவரைப் பணிந்துகொண்டு:** உம்மிடத்தில் ஒரு விண்ணப்பம் பண்ணவேண்டும் என்றாள். | பின்பு செபதேயுவின் மனைவி தம் மக்களோடு ஒரு வேண்டுகோள் விடுக்குமாறு **இயேசுவிடம் வந்து பணிந்து நின்றார்.** |
| 27 | Matthew 20:22<br><br>REMOVED 12 WORDS ''babtized with | இயேசு பிரதியுத்தரமாக: நீங்கள் கேட்டுக்கொள்ளுகிறது இன்னது என்று உங்களுக்குத் தெரியவில்லை. நான் **குடிக்கும் பாத்திரத்தில் நீங்கள்** | அதற்கு இயேசு, "நீங்கள் என்ன கேட்கிறீர்கள் என உங்களுக்குத் தெரியவில்லை. நான் குடிக்கப்போகும் துன்பக் கிண்ணத்தில் உங்களால் **குடிக்க இயலுமா?" என்று கேட்டார்.** |

| | | | |
|---|---|---|---|
| | Christ`s babtism'' | **குடிக்கவும், நான் பெறும் ஸ்நானத்தை நீங்கள் பெறவும் உங்களால் கூடுமா என்றார்.** அதற்கு அவர்கள்: கூடும் என்றார்கள். | அவர்கள் "எங்களால் இயலும்" என்றார்கள். |
| 28 | Matthew 21:44<br><br>REMOVED ENTIRE VERSE (esp previous edition of NIV,RSV in 1973,1978,1984).But 2011 edition seems to contain these,as seen here, as esp Internet Translation comparision become so common) Notice that the updated NIV 2011 is 38.8% different than the original NIV 1984... | இந்தக் கல்லின்மேல் விழுகிறவன் நொறுங்கிப்போவான்; இது எவன்மேல் விழுமோ அவனை நசுக்கிப்போடும் என்று நான் உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார். | "இந்தக் கல்லின்மேல் விழுகிறவர் நொறுங்கிப்போவார். இது யார் மேல் விழுமோ அவரும் நசுங்கிப் போவார் " என்றார். |

| 29 | Matthew 23:14<br><br>REMOVED ENTIRE VERSE | **மாயக்காரராகிய வேதபாரகரே! பரிசேயரே! உங்களுக்கு ஐயோ,** பார்வைக்காக நீண்ட ஜெபம்பண்ணி, விதவைகளின் வீடுகளைப் பட்சித்துப்போடுகிறீர்கள்; இதினிமித்தம் அதிக ஆக்கினையை அடைவீர்கள். | மக்கள் நுழையாதவாறு அவர்கள் முன்பாக விண்ணக வாயிலை அடைத்துவிடுகிறீர்கள்; நீங்கள் நுழைவதில்லை, நுழைவோரையும் விடுவதில்லை; |
|---|---|---|---|
| 30 | Matthew 23:33<br><br>CHANGED ''damnation TO condemn, et.al, | சர்ப்பங்களே, விரியன்பாம்புக்குட்டிகளே! **நரகாக்கினைக்கு எப்படித் தப்பித்துக்கொள்ளுவீர்கள்?** | பாம்புகளே, விரியன் பாம்புக் குட்டிகளே, **நரகத் தண்டனையிலிருந்து நீங்கள் எப்படித்** தப்பித்துக்கொள்வீர்கள்? |
| 31 | Matthew 24:36<br><br>ADDITION ''nor the son'' CHANGED ''my Father'' TO ''the Father'' | அந்த நாளையும் அந்த நாழிகையையும் **என் பிதா ஒருவர் தவிர** மற்றொருவனும் அறியான்; பரலோகத்திலுள்ள தூதர்களும் அறியார்கள். | "அந்த நாளையும் வேளையையும்பற்றித் **தந்தை ஒருவருக்குத்** தவிர வேறு எவருக்கும் தெரியாது. விண்ணகத் தூதருக்கோ மகனுக்கோகூடத் தெரியாது. |
| 32 | Matthew 25:13<br><br>REMOVED "wherein the Son of man cometh" | **மனுஷகுமாரன் வரும் நாளையாவது** நாழிகையையாவது நீங்கள் அறியாதிருக்கிறபடியால் விழித்திருங்கள். | எனவே விழிப்பாயிருங்கள்; ஏனெனில் அவர் வரும் நாளோ வேளையோ உங்களுக்குத் தெரியாது. |

| 33 | Matthew 27:35<br><br>REMOVED LAST 25 WORDS | அவரைச் சிலுவையில் அறைந்தபின்பு, அவர்கள் சீட்டுப்போட்டு அவருடைய வஸ்திரங்களைப் பங்கிட்டுக் கொண்டார்கள். **என் வஸ்திரங்களைத் தங்களுக்குள்ளே பங்கிட்டு, என் உடையின்பேரில் சீட்டுப்போட்டார்கள் என்று தீர்க்கதரிசியால் உரைக்கப்பட்டது நிறைவேறும்படி இப்படி நடந்தது.** | அவர்கள் அவரைச் சிலுவையில் அறைந்த பின்பு குலுக்கல் முறையில் அவருடைய ஆடைகளைப் பங்கிட்டுக்கொண்டார்கள்; |
|---|---|---|---|
| 34 | Matthew 28:2<br><br>REMOVED "from the door" | அப்பொழுது, பூமி மிகவும் அதிரும்படி, கர்த்தருடைய தூதன் வானத்திலிருந்திறங்கிவந்து, **வாசலிலிருந்த கல்லைப்** புரட்டித் தள்ளி, அதின்மேல் உட்கார்ந்தான். | திடீரென ஒரு பெரிய நிலநடுக்கம் ஏற்பட்டது. ஆண்டவரின் தூதர் விண்ணகத்திலிருந்து இறங்கி வந்து கல்லறையை **மூடியிருந்த கல்லைப்** புரட்டி அதன் மேல் உட்கார்ந்தார். |
| 35 | Matthew 28:9<br><br>REMOVED "as they went to tell his disciples" | **அவர்கள் அவருடைய சீஷர்களுக்கு அறிவிக்கப்போகிறபோது,** இயேசு தாமே அவர்களுக்கு எதிர்ப்பட்டு: வாழ்க என்றார். அவர்கள் கிட்டவந்து, அவர் பாதங்களைத் தழுவி, அவரை பணிந்துகொண்டார்கள். | **திடீரென்று இயேசு** அவர்களை எதிர்கொண்டு வந்து வாழ்த்தினார். அவர்கள் அவரை அணுகி அவர் காலடிகளைப பற்றிக் கொண்டு பணிந்து நின்றார்கள். |
| 36 | Mark 1:1<br><br>REMOVED "the Son of God'' | **தேவனுடைய குமாரனாகிய இயேசு கிறிஸ்துவினுடைய சுவிசேஷத்தின்** ஆரம்பம். | கடவுளின் மகனாகிய இயேசு **கிறிஸ்துவைப் பற்றிய நற்செய்தியின்** தொடக்கம்; |

| | | | |
|---|---|---|---|
| 37 | Mark 1:2<br><br>CHANGED "Prophets TO Isaiah'' BLATANT LIE | இதோ, நான் என் தூதனை உமக்கு முன்பாக அனுப்புகிறேன், அவன் உமக்கு முன்னே போய், உமக்கு வழியை ஆயத்தம்பண்ணுவான் என்றும்;<br><br>3 கர்த்தருக்கு வழியை ஆயத்தப்படுத்துங்கள், அவருக்குப் பாதைகளைச் செவ்வைபண்ணுங்கள் என்று வனாந்தரத்திலே கூப்பிடுகிறவனுடைய சத்தம் உண்டாகும் என்றும், **தீர்க்கதரிசன ஆகமங்களில் எழுதியிருக்கிற பிரகாரமாய்;** | இதோ, என் தூதனை உமக்குமுன் அனுப்புகிறேன்; அவர் உமக்கு வழியை ஆயத்தம் செய்வார்.<br><br>3 பாலை நிலத்தில் குரல் ஒன்று முழங்குகிறது; ஆண்டவருக்காக வழியை ஆயத்தமாக்குங்கள்; அவருக்காகப் பாதையைச் செம்மையாக்குங்கள்" என்று இறைவாக்கினர் **எசாயாவின் நூலில் எழுதப்பட்டுள்ளது.** |
| 38 | Mark 1:14<br><br>REMOVED "of the kingdom " of God | யோவான் காவலில் வைக்கப்பட்ட பின்பு, இயேசு கலிலேயாவிலே வந்து, **தேவனுடைய ராஜ்யத்தின் சுவிசேஷத்தைப் பிரசங்கித்து:** | யோவான் கைதுசெய்யப்பட்டபின், **கடவுளின் நற்செய்தியைப் பறைசாற்றிக் கொண்டே** இயேசு கலிலேயாவிற்கு வந்தார். |
| 39 | Mark 1:21<br><br>REMOVED "immediately" | பின்பு கப்பர்நகூமுக்குப் போனார்கள். **உடனே** அவர் ஓய்வுநாளிலே ஜெபஆலயத்திலே பிரவேசித்து, போதகம்பண்ணினார். | அவர்கள் கப்பர்நாகும் ஊரில் நுழைந்தார்கள். ஓய்வு நாள்களில் இயேசு தொழுகைக்கூடத்திற்குச் சென்று கற்பித்து வந்தார். |

| 40 | Mark 2:17<br><br>REMOVED "to repentance'' | இயேசு அதைக் கேட்டு: பிணியாளிகளுக்கு வைத்தியன் வேண்டியதேயல்லாமல் சுகமுள்ளவர்களுக்கு வேண்டியதில்லை; நீதிமான்களையல்ல, **பாவிகளையே மனந்திரும்புகிறதற்கு** அழைக்கவந்தேன் என்றார். | இயேசு, இதைக் கேட்டவுடன் அவர்களை நோக்கி, "நோயற்றவர்க்கு அல்ல, நோயுற்றவருக்கே மருத்துவர் தேவை. நேர்மையாளர்களை அல்ல, **பாவிகளையே அழைக்க** வந்தேன்" என்றார். |
|---|---|---|---|
| 41 | Mark 3:29<br><br>CHANGED "eternal damnation TO eternal sin" , et al. | ஒருவன் பரிசுத்த ஆவிக்கு விரோதமாகத் தூஷணஞ்சொல்வானாகில், அவன் என்றென்றைக்கும் மன்னிப்படையாமல் **நித்திய ஆக்கினைக்குள்ளாயிருப்பான்** என்றார். | Mark 9:29 ஆனால் மக்களுடைய மற்றப் பாவங்கள், அவர்கள் கூறும் பழிப்புரைகள் அனைத்தும் அவர்களுக்கு மன்னிக்கப்படும்."<br><br>(Mark 3:28! in catholic Bible)<br>உறுதியாக உங்களுக்குச் சொல்கிறேன். தூய ஆவியைப் பழித்து உரைப்பவர் எவரும் எக்காலத்திலும் மன்னிப்புப்பெறார்; அவர் என்றென்றும் **தீராத பாவத்திற்கு** ஆளாவார்.<br>(verse 28 & 29 sequence is reversed!) why??? |
| 42 | Mark 6:11<br><br>REMOVED LAST 23 WORDS | எவர்களாகிலும் உங்களை ஏற்றுக்கொள்ளாமலும், உங்கள் வசனங்களைக்கேளாமலும் இருந்தால், நீங்கள் அவ்விடம் விட்டுப் புறப்படும்போது, அவர்களுக்குச் சாட்சியாக | உங்களை எந்த ஊராவது ஏற்றுக் கொள்ளாமலோ உங்களுக்குச் செவி சாய்க்காமலோ போனால் அங்கிருந்து வெளியேறும் பொழுது, உங்கள் கால்களில் படிந்துள்ள தூசியை |

| | | | |
|---|---|---|---|
| | | உங்கள் கால்களின் கீழே படிந்த தூசியை உதறிப்போடுங்கள். **நியாயத்தீர்ப்புநாளிலே அந்தப் பட்டணத்திற்கு நேரிடுவதைப்பார்க்கிலும் சோதோம் கொமோரா பட்டணத்திற்கு நேரிடுவது இலகுவாயிருக்கும் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்று சொல்லி, அவர்களை இரண்டு இரண்டுபேராக அனுப்பினார்.** | உதறிவிடுங்கள். இதுவே அவர்களுக்கு எதிரான சான்றாகும்” என்று அவர்களுக்குக் கூறினார்; |
| 43 | Mark 7:8<br><br>REMOVED LAST 15 WORDS | நீங்கள் தேவனுடைய கட்டளையைத் தள்ளிவிட்டு, மனுஷருடைய பாரம்பரியத்தைக் **கைக்கொண்டுவருகிறவர்களாய், கிண்ணங்களையும் செம்புகளையும் கழுவுகிறீர்கள்; மற்றும் இப்படிப்பட்ட அநேக சடங்குகளையும் அனுசரித்துவருகிறீர்கள்** என்றார். | நீங்கள் கடவுளின் கட்டளைகளைக் கைவிட்டு மனித மரபைப் பின்பற்றி வருகிறவர்கள்” என்று அவர்களிடம் கூறினார். |
| 44 | Mark 7:16<br><br>REMOVED ENTIRE VERSE | **கேட்கிறதற்கு ஒருவன் காதுள்ளவனாயிருந்தால் கேட்கக்கடவன் என்றார்.** | (கேட்கச் செவியுள்ளோர் கேட்கட்டும் “) என்று கூறினார். |
| 45 | Mark 9:24 | உடனே பிள்ளையின் | உடனே அச்சிறுவனின் தந்தை, |

| | | | |
|---|---|---|---|
| | REMOVED "Lord (refers to Jesus) | தகப்பன்: **விசுவாசிக்கிறேன் ஆண்டவரே,** என் அவிசுவாசம் நீங்கும்படி உதவிசெய்யும் என்று கண்ணீரோடே சத்தமிட்டுச் சொன்னான். | **"நான் நம்புகிறேன்.** என் நம்பிக்கையின்மை நீங்க உதவும்" என்று கதறினார். |
| 46 | Mark 9:44<br><br>REMOVED ENTIRE VERSE(about hell) | **அங்கே அவர்கள் புழு சாவாமலும் அக்கினி அவியாமலுமிருக்கும்.** | (verse 45 is split in to verse 44 and 45!) |
| 47 | Mark 9:46<br><br>REMOVED ENTIRE VERSE(about hell) | **அங்கே அவர்கள் புழு சாவாமலும் அக்கினி அவியாமலுமிருக்கும்.** | (verse 47 is split in to verse 46 and 47) |
| 48 | Mark 9:48 (The verse Mark 9:44,46 & 48 contains the same wordings to SIGNIFY ITS TRUTH & IMPORTANCE FOR WARNING) | **அங்கே அவர்கள் புழு சாவாமலும் அக்கினி அவியாமலுமிருக்கும்.** | நரகத்திலோ அவர்களைத் தின்னும் புழு சாகாது; நெருப்பும் அவியாது. |
| 49 | Mark 9:49<br><br>REMOVED | எந்தப் பலியும் உப்பினால் உப்பிடப்படுவதுபோல, **எந்த மனுஷனும் அக்கினியினால்** | ஏனெனில் பலிப்பொருள் உப்பால் தூய்மையாக்கப்படுவதுபோல் |

| | “and every sacrifice shall be salted with salt’’ | **உப்பிடப்படுவான்.** | **ஒவ்வொருவரும் நெருப்பால் தூய்மையாக்கப்படுவர்.** |
|---|---|---|---|
| 50 | Mark 10:21<br><br>REMOVED “take up the cross” | இயேசு அவனைப் பார்த்து, அவனிடத்தில் அன்புகூர்ந்து: உன்னிடத்தில் ஒரு குறைவு உண்டு; நீ போய், உனக்கு உண்டானவைகளையெல்லாம் விற்று, தரித்திரருக்குக் கொடு; அப்பொழுது பரலோகத்திலே உனக்குப் பொக்கிஷம் உண்டாயிருக்கும்; **பின்பு சிலுவையை எடுத்துக்கொண்டு, என்னைப் பின்பற்றிவா என்றார்.** | அப்போது இயேசு அன்பொழுக அவரைக் கூர்ந்து நோக்கி, “உமக்கு இன்னும் ஒன்று குறைபடுகிறது. நீர் போய் உமக்கு உள்ளவற்றை விற்று ஏழைகளுக்குக் கொடும். அப்போது விண்ணகத்தில் நீர் செல்வராய் இருப்பீர். **பின்பு வந்து என்னைப் பின்பற்றும்”** என்று அவரிடம் கூறினார். |
| 51 | Mark 10:24<br><br>REMOVED “for them that trust in riches” | சீஷர்கள் அவருடைய வார்த்தைகளைக்குறித்து ஆச்சரியப்பட்டார்கள். இயேசு பின்னும் அவர்களை நோக்கி: **பிள்ளைகளே, ஐசுவரியத்தின்மேல் நம்பிக்கையாயிருக்கிறவர்கள் தேவனுடைய ராஜ்யத்தில் பிரவேசிக்கிறது எவ்வளவு அரிதாயிருக்கிறது!** | சீடர்கள் அவர் சொன்னதைக் கேட்டுத் திகைப்புக்கு உள்ளானார்கள். மீண்டும் இயேசு அவர்களைப் பார்த்து, **“பிள்ளைகளே, செல்வர்கள் இறையாட்சிக்கு உட்படுவது மிகவும் கடினம்.** |
| 52 | Mark 11:10<br><br>REMOVED “that cometh in the name | **கர்த்தரின் நாமத்தினாலே வருகிற** நம்முடைய பிதாவாகிய தாவீதின் ராஜ்யம் ஆசீர்வதிக்கப்படுவதாக; உன்னதத்திலே ஓசன்னா | **வரவிருக்கும்** நம் தந்தை தாவீதின் அரசு போற்றப்பெறுக! உன்னதத்தில் ஓசன்னா!” என்று ஆர்ப்பரித்தனர். |

| | of the Lord” | என்று சொல்லி ஆர்ப்பரித்தார்கள். | |
|---|---|---|---|
| 53 | Mark 11:26<br><br>REMOVED ENTIRE VERSE | **நீங்கள் மன்னியாதிருப்பீர்களானால், பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதாவும் உங்கள் தப்பிதங்களை மன்னியாதிருப்பார் என்றார்.**<br><br>Mark 11:25 நீங்கள் நின்று ஜெபம்பண்ணும்போது, ஒருவன்பேரில் உங்களுக்கு யாதொரு குறை உண்டாயிருக்குமானால், பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதா உங்கள் தப்பிதங்களை உங்களுக்கு மன்னிக்கும்படி, அந்தக் குறையை அவனுக்கு மன்னியுங்கள். | **அப்போது உங்கள் விண்ணகத் தந்தையும் உங்கள் குற்றங்களை மன்னிப்பார்” என்று கூறினார்.**<br><br>Original KJV Mark 11:25 is split in to verse 25 and 26,and original KJV Mark 11:26 is OMITTED |
| 54 | Mark 12:23<br><br>REMOVED “when they shall rise” | ஆகையால், **உயிர்த்தெழுதலில், அவர்கள் எழுந்திருக்கும்போது,** அவர்களில் எவனுக்கு அவள் மனைவியாயிருப்பாள்? ஏழுபேரும் அவளை மனைவியாகக் கொண்டிருந்தார்களே என்று கேட்டார்கள். | அவர்கள் **உயிர்த்தெழும் போது,** அவர் அவர்களுள் யாருக்கு மனைவியாக இருப்பார்? ஏனெனில் எழுவரும் அவரை மனைவியாகக் கொண்டிருந்தனரே!” என்று கேட்டனர். |
| 55 | Mark 12:40<br><br>CHANGED “greater damnation | விதவைகளின் வீடுகளைப் பட்சித்து, பார்வைக்கு நீண்ட ஜெபம்பண்ணுகிற வேதபாரகரைக்குறித்து எச்சரிக்கையாயிருங்கள்; | கைம்பெண்களின் வீடுகளைப் பிடுங்கிக்கொள்கிறார்கள்; **கடுந்தண்டனைத் தீர்ப்புக்கு** ஆளாகவிருப்பவர்கள் இவர்களே” என்று கூறினார். |

|  |  |  |  |
|---|---|---|---|
|  | TO punished severely,greater condemnation | **அவர்கள் அதிக ஆக்கினையை அடைவார்கள் என்றார்.** |  |
| 56 | Mark 13:6<br><br>CHANGED "Iam Christ TO Iam he or One" | ஏனெனில் அநேகர் வந்து, என் நாமத்தைக்கொண்டு: **நானே கிறிஸ்து** என்று சொல்லி, அநேகரை வஞ்சிப்பார்கள். | ஏனெனில் பலர் என் பெயரை வைத்துக்கொண்டு வந்து, **"நானே அவர்"** என்று சொல்லிப் பலரை நெறிதவறச் செய்வர். |
| 57 | Mark 13:14<br><br>REMOVED "spoken of by Daniel the Prophet" | **மேலும் பாழாக்குகிற அருவருப்பைக்குறித்துத் தானியேல் தீர்க்கதரிசி சொல்லியிருக்கிறானே;** வாசிக்கிறவன் சிந்திக்கக்கடவன்; அது நிற்கத்தகாத இடத்திலே நீங்கள் அதை நிற்க காணும்போது, யூதேயாவில் இருக்கிறவர்கள் மலைகளுக்கு ஓடிப்போகக்கடவர்கள். | "நடுங்க வைக்கும் தீட்டு" நிற்கக்கூடாத இடத்தில் நிற்பதை நீங்கள் காண்பீர்கள். படிப்பவர் இதைப் புரிந்து கொள்ளட்டும். அப்போது யூதேயாவில் உள்ளவர்கள் மலைகளுக்குத் தப்பி ஓடட்டும். |
| 58 | Mark 13:33<br><br>REMOVED "and Pray" | அக்காலத்தை நீங்கள் அறியாதபடியால் எச்சரிக்கையாயிருங்கள், **விழித்திருந்து ஜெபம்பண்ணுங்கள்.** | கவனமாயிருங்கள், **விழிப்பாயிருங்கள்.** ஏனெனில் அந்நேரம் எப்போது வரும் என உங்களுக்குத் தெரியாது. |
| 59 | Mark 14:68<br><br>REM '' and the cock crew''.. | அதற்கு அவன்: நான் அறியேன்; நீ சொல்லுகிறது எனக்குத் தெரியாது என்று மறுதலித்து, **வெளியே வாசல் மண்டபத்துக்குப் போனான்; அப்பொழுது சேவல் கூவிற்று.** | அவரோ, "நீர் சொல்வது என்னவென்று எனக்குத் தெரியவில்லை, புரியவுமில்லை" என்று மறுதலித்து, வெளி முற்றத்திற்குச் சென்றார். |

| | | | |
|---|---|---|---|
| | | | (அப்பொழுது சேவல் கூவிற்று ). |
| 60 | Mark 15:28<br><br>REMOVED ENTIRE VERSE | **அக்கிரமக்காரரில் ஒருவனாக எண்ணப்பட்டார் என்கிற வேதவாக்கியம் அதனாலே நிறைவேறிற்று.** | VERSE 27 is split into 27 and 28.<br>ACTUAL VERSE Mark15: 28 OF KJV IS MISSING! |
| 61 | Mark 16:9-20<br><br>REMOVED ENTIRE LAST 12 VERSES OF MARK 16(esp previous edition of NIV,RSV in 1973,1978,1984).But 2011 edition seems to contain these,as seen here, as esp Internet Translation comparision become so common) Notice that the updated NIV 2011 is 38.8% different than | வாரத்தின் முதலாம் நாள் அதிகாலையிலே இயேசு எழுந்திருந்தபின்பு, மகதலேனா மரியாளுக்கு முதல்முதல் தரிசனமானார்.<br>10 அவளிடத்திலிருந்து அவர் ஏழு பிசாசுகளைத் துரத்தியிருந்தார். அவள் புறப்பட்டு, அவரோடேகூட இருந்தவர்கள் துக்கப்பட்டு அழுதுகொண்டிருக்கையில், அவர்களிடத்தில் போய், அந்தச் செய்தியை அறிவித்தாள்.<br>11 அவர் உயிரோடிருக்கிறாரென்றும் அவளுக்குக் காணப்பட்டார் என்றும் அவர்கள் கேட்டபொழுது நம்பவில்லை.<br>12 அதன்பின்பு அவர்களில் இரண்டுபேர் ஒரு கிராமத்துக்கு நடந்துபோகிறபொழுது அவர்களுக்கு மறுரூபமாய்த் தரிசனமானார். | 9 (வாரத்தின் முதல் நாள் காலையில் இயேசு உயிர்த்தெழுந்தபின்பு அவர் முதலில் மகதலா மரியாவுக்குத் தோன்றினார். அவரிடமிருந்துதான் அவர் ஏழு பேய்களை ஓட்டியிருந்தார்.<br><br>10 மரியா புறப்பட்டுச் சென்று இயேசுவோடு இருந்தவர்களிடம் இதை அறிவித்தார். அவர்கள் துயருற்று அழுதுகொண்டிருந்தார்கள்.<br><br>11 அவர் உயிரோடு இருக்கிறார் என்றும் மரியா அவரைக் கண்டார் என்றும் கேட்டபோது அவர்கள் நம்பவில்லை.<br><br>12 அதன்பிறகு அவர்களுள் இருவர் வயல்வெளிக்கு நடந்து சென்றபோது இயேசு அவர்களுக்கு வேற்று உருவில் தோன்றினார். |

|  | the original NIV 1984... | 13 அவர்களும் போய், அதை மற்றவர்களுக்கு அறிவித்தார்கள்; அவர்களையும் அவர்கள் நம்பவில்லை.<br>14 அதன்பின்பு பதினொருவரும் போஜனபந்தியிலிருக்கையில் அவர்களுக்கு அவர் தரிசனமாகி, உயிர்த்தெழுந்திருந்த தம்மைக் கண்டவர்களை அவர்கள் நம்பாமற்போனதினிமித்தம் அவர்களுடைய அவிசுவாசத்தைக்குறித்தும் இருதய கடினத்தைக்குறித்தும் அவர்களைக் கடிந்துகொண்டார்.<br>15 பின்பு, அவர் அவர்களை நோக்கி: நீங்கள் உலகமெங்கும்போய், சர்வ சிருஷ்டிக்கும் சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள்.<br>16 விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான்; விசுவாசியாதவனோ ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படுவான்.<br>17 விசுவாசிக்கிறவர்களால் நடக்கும் அடையாளங்களாவன: என் நாமத்தினாலே பிசாசுகளைத் துரத்துவார்கள்; நவமான | 13 அவர்கள் சென்று அதனை மற்றவர்களுக்கு அறிவித்தார்கள்; அவர்கள் சொன்னதையும் சீடர்கள் நம்பவில்லை.<br>14 இறுதியாகப் பதினொருவரும் பந்தியில் அமர்ந்திருந்தபொழுது அவர்களுக்கு இயேசு தோன்றினார். உயிருடன் எழுப்பப்பட்ட தம்மைக் கண்டவர்கள் சொன்னதை நம்பாமல் அவர்கள் கடின உள்ளத்தோடு இருந்தமையால் அவர் அவர்களுடைய நம்பிக்கையின்மையைக் கண்டித்தார்.<br>15 இயேசு அவர்களை நோக்கி, “உலகெங்கும் சென்று படைப்பிற்கெல்லாம் நற்செய்தியைப் பறைசாற்றுங்கள்.<br>16 நம்பிக்கைகொண்டு திருமுழுக்குப் பெறுவோர் மீட்புப் பெறுவர்; நம்பிக்கையற்றவரோ தண்டனைத் தீர்ப்புப் பெறுவர்.<br>17 நம்பிக்கை கொண்டோர் பின்வரும் அரும் அடையாளங்களைச் செய்வர்; அவர்கள் என் பெயரால் |

| | | | |
|---|---|---|---|
| | | பாஷைகளைப் பேசுவார்கள்;<br>18 சர்ப்பங்களை எடுப்பார்கள்; சாவுக்கேதுவான யாதொன்றைக் குடித்தாலும் அது அவர்களைச் சேதப்படுத்தாது; வியாதியஸ்தர்மேல் கைகளை வைப்பார்கள், அப்பொழுது அவர்கள் சொஸ்தமாவார்கள் என்றார்.<br>19 இவ்விதமாய்க் கர்த்தர் அவர்களுடனே பேசினபின்பு, பரலோகத்துக்கு எடுத்துக்கொள்ளப்பட்டு, தேவனுடைய வலதுபாரிசத்தில் உட்கார்ந்தார்.<br>20 அவர்கள் புறப்பட்டுப்போய், எங்கும் பிரசங்கம்பண்ணினார்கள். கர்த்தர் அவர்களுடனேகூடக் கிரியையை நடப்பித்து, அவர்களால் நடந்த அடையாளங்களினாலே வசனத்தை உறுதிப்படுத்தினார். ஆமென். | பேய்களை ஓட்டுவர்; புதிய மொழிகளைப் பேசுவர்;<br><br>18 பாம்புகளைத் தம் கையால் பிடிப்பர். கொல்லும் நஞ்சைக் குடித்தாலும் அது அவர்களுக்குத் தீங்கு இழைக்காது. அவர்கள் உடல் நலமற்றோர்மீது கைகளை வைக்க, அவர்கள் குணமடைவர்" என்று கூறினார்.<br><br>19 இவ்வாறு அவர்களோடு பேசிய பின்பு ஆண்டவர் இயேசு விண்ணேற்றமடைந்து கடவுளின் வலப்புறம் அமர்ந்தார்.<br><br>20 அவர்கள் புறப்பட்டுச் சென்று எங்கும் நற்செய்தியைப் பறைசாற்றினர். ஆண்டவரும் உடனிருந்து செயல்பட்டு, நிகழ்ந்த அரும் அடையாளங்களால் அவர்களுடைய வார்த்தையை உறுதிப்படுத்தினார்.) |
| 62 | Luke 1:28<br><br>REM "blessed art thou among women" | அவள் இருந்த வீட்டில் தேவதூதன் பிரவேசித்து: கிருபை பெற்றவளே, வாழ்க, கர்த்தர் உன்னுடனே இருக்கிறார், **ஸ்திரீகளுக்குள்ளே நீ ஆசீர்வதிக்கப்பட்டவள்** | வானதூதர் மரியாவுக்குத் தோன்றி, "அருள்மிகப் பெற்றவரே வாழ்க! ஆண்டவர் உம்மோடு இருக்கிறார்" என்றார். |

| | | | |
|---|---|---|---|
| | | என்றான். | |
| 63 | Luke 2:14<br><br>CHG good will toward men TO to men on whom his favor rests"et al | உன்னதத்திலிருக்கிற தேவனுக்கு மகிமையும், **பூமியிலே சமாதானமும், மனுஷர்மேல் பிரியமும் உண்டாவதாக** என்று சொல்லி, தேவனைத் துதித்தார்கள். | **உலகில் அவருக்கு உகந்தோருக்கு அமைதி உண்டாகுக!"** என்று கடவுளைப் புகழ்ந்தது. |
| 64 | Luke 2:22<br><br>CHG "her" TO "their" (makes Jesus a sinner) | மோசேயின் நியாயப்பிரமாணத்தின்படியே அவர்களுடைய சுத்திகரிப்பின் **நாட்கள் நிறைவேறினபோது,முதற்பேற ான எந்த ஆண்பிள்ளையும் கர்த்தருக்குப்** பரிசுத்தமானதென்னப்படும் என்று கர்த்தருடைய நியாயப்பிரமாணத்தில் எழுதியிருக்கிறபடி அவரைக் கர்த்தருக்கென்று ஒப்புக்கொடுக்கவும், | மோசேயின் சட்டப்படி தூய்மைச் சடங்கை நிறைவேற்றவேண்டிய **நாள் வந்தபோது குழந்தையை ஆண்டவருக்கு அர்ப்பணிக்க அவர்கள் எருசலேமுக்குக்** கொண்டு சென்றார்கள். ஏனெனில், "ஆண் தலைப்பேறு அனைத்தும் ஆண்டவருக்கு அர்ப்பணிக்கப்படும்" என்று அவருடைய திருச்சட்டத்தில் எழுதியுள்ளது. |
| 65 | Luke 2:33<br><br>CHG "Joseph" TO "his father" (attacks virgin birth) | அவரைக்குறித்துச் சொல்லப்பட்டவைகளுக்காக **யோசேப்பும் அவருடைய தாயாரும் ஆச்சரியப்பட்டார்கள்.** | குழந்தையைக் குறித்துக் கூறியவை பற்றி **அதன் தாயும் தந்தையும் வியப்புற்றனர்.** |
| 66 | Luke 2:43 | பண்டிகைநாட்கள் முடிந்து, திரும்பிவருகிறபோது, | விழா நாள்கள் முடிந்து அவர்கள் திரும்பியபோது, |

|  | CHG "Joseph and his mother" TO "parents" | பிள்ளையாகிய இயேசு எருசலேமிலே இருந்துவிட்டார்; **இது அவருடைய தாயாருக்கும் யோசேப்புக்கும் தெரியாதிருந்தது.** | சிறுவன் இயேசு எருசலேமில் தங்கிவிட்டார். **இது அவருடைய பெற்றோருக்குத் தெரியாது;** |
|---|---|---|---|
| 67 | Luke 4:4<br><br>REM "but by every word of God" | அவர் பிரதியுத்தரமாக: மனுஷன் அப்பத்தினாலேமாத்திரமல்ல, **தேவனுடைய ஒவ்வொரு வார்த்தையினாலும் பிழைப்பான் என்று எழுதியிருக்கிறதே** என்றார். | அதனிடம் இயேசு மறுமொழியாக, **"மனிதர் அப்பத்தினால் மட்டும் வாழ்வதில்லை" என மறைநூலில் எழுதியுள்ளதே"** என்றார். |
| 68 | Luke 4:8<br><br>REM "get thee behind me, Satan" | இயேசு அவனுக்குப் பிரதியுத்தரமாக: **எனக்குப் பின்னாகப்போ சாத்தானே,** உன் தேவனாகிய கர்த்தரைப் பணிந்துகொண்டு, அவர் ஒருவருக்கே ஆராதனைசெய்வாயாக என்று எழுதியிருக்கிறதே என்றார். | இயேசு அதனிடம் மறுமொழியாக, "'உன் கடவுளாகிய ஆண்டவரை வணங்கி அவர் ஒருவருக்கே பணி செய்வாயாக" என்று மறைநூலில் எழுதியுள்ளது" என்றார். |
| 69 | Luke 4:18<br><br>REM 8 WORDS "he hath sent me to heal…" | கர்த்தருடைய ஆவியானவர் என்மேலிருக்கிறார்; தரித்திரருக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கும்படி என்னை அபிஷேகம்பண்ணினார்; **இருதயம் நருங்குண்டவர்களைக் குணமாக்கவும்,** சிறைப்பட்டவர்களுக்கு விடுதலையையும், குருடருக்குப் பார்வையையும் | "ஆண்டவருடைய ஆவி என்மேல் உளது; ஏனெனில், அவர் எனக்கு அருள்பொழிவு செய்துள்ளார். ஏழைகளுக்கு நற்செய்தியை அறிவிக்கவும் சிறைப்பட்டோர் விடுதலை அடைவர். பார்வையற்றோர் பார்வைபெறுவர் என முழக்கமிடவும் ஒடுக்கப்பட்டோரை விடுதலை செய்து அனுப்பவும் |

| | | | |
|---|---|---|---|
| | | பிரசித்தப்படுத்தவும், நொறுங்குண்டவர்களை விடுதலையாக்கவும், | |
| 70 | Luke 4:41<br><br>REM "Christ" | பிசாசுகளும்: நீர் **தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்து என்று சத்தமிட்டு,** அநேகரைவிட்டுப் புறப்பட்டது. அவரைக் கிறிஸ்து என்று பிசாசுகள் அறிந்திருந்தபடியால் அவர் அவைகளைப் பேசவொட்டாமல் அதட்டினார். | பேய்களும், **"நீர் இறைமகன்" என்று** கத்திக்கொண்டே பலரிடமிருந்து வெளியேறின. அவர் மெசியா என்று பேய்கள் அறிந்திருந்தபடியால், அவர் அவற்றை அதட்டி, பேசவிடாமல் தடுத்தார். |
| 71 | Luke 6:48<br><br>CHG "founded upon a rock" TO "well built" | ஆழமாய்த் தோண்டி, கற்பாறையின்மேல் அஸ்திபாரம்போட்டு, வீடுகட்டுகிற மனுஷனுக்கு ஒப்பாயிருக்கிறான்; பெருவெள்ளம் வந்து, நீரோட்டம் அந்த வீட்டின்மேல் மோதியும், அதை அசைக்கக்கூடாமற்போயிற்று; **ஏனென்றால் அது கன்மலையின்மேல் அஸ்திபாரம் போடப்பட்டிருந்தது.** | அவர் ஆழமாய்த் தோண்டி, பாறையின் மீது அடித்தளம் அமைத்து, வீடு கட்டிய ஒருவருக்கு ஒப்பாவார். வெள்ளம் ஆறாகப் பெருக்கெடுத்து அந்த வீட்டின்மேல் மோதியும் அதை அசைக்க முடியவில்லை; **ஏனென்றால் அது நன்றாகக் கட்டப்பட்டிருந்தது.** |
| 72 | Luke 9:54<br><br>REM "even as Elijah did" | அவருடைய சீஷராகிய யாக்கோபும் யோவானும் அதைக் கண்டபோது: **ஆண்டவரே, எலியா செய்ததுபோல, வானத்திலிருந்து அக்கினி இறங்கி** இவர்களை | அவருடைய சீடர்கள் யாக்கோபும் யோவானும் இதைக் கண்டு, "**ஆண்டவரே, வானத்திலிருந்து தீ வந்து** இவர்களை அழிக்குமாறு செய்யவா? இது உமக்கு விருப்பமா?" என்று |

| | | அழிக்கும்படி நாங்கள் கட்டளையிட உமக்குச் சித்தமா என்று கேட்டார்கள். | கேட்டார்கள். |
|---|---|---|---|
| 73 | Luke 9:55<br><br>REM 9 WORDS "ye know not what manner of spirit..." | அவர் திரும்பிப்பார்த்து: **நீங்கள் இன்ன ஆவியுள்ளவர்களென்பதை அறியீர்கள் என்று அதட்டி**, | அவர் அவர்கள் பக்கம் திரும்பி, **அவர்களைக் கடிந்து கொண்டார்.** |
| 74 | Luke 9:56<br><br>REM FIRST 16 WORDS For the Son of man is not come to destroy men's lives, but to save them." | **மனுஷகுமாரன் மனுஷருடைய ஜீவனை அழிக்கிறதற்கு அல்ல, இரட்சிக்கிறதற்கே வந்தார் என்றார்.** அதன்பின்பு அவர்கள் வேறொரு கிராமத்துக்குப் போனார்கள். | பின்பு அவர்கள் வேறோர் ஊருக்குச் சென்றார்கள். |
| 75 | Luke 9:57<br><br>REM Lord | அவர்கள் வழியிலே போகையில் ஒருவன் அவரை நோக்கி: **ஆண்டவரே, நீர் எங்கே போனாலும்** உம்மைப் பின்பற்றி வருவேன் என்றான். | அவர்கள் வழி நடந்தபோது ஒருவர் அவரை நோக்கி, **“நீர் எங்கே சென்றாலும்** நானும் உம்மைப் பின்பற்றுவேன்” என்றார். |
| 76 | Luke 10:15<br><br>REM hell | வானபரியந்தம் உயர்த்தப்பட்ட கப்பர்நகூமே, நீ பாதாளபரியந்தம் தாழ்த்தப்படுவாய் என்று சொல்லி, | ப்பர்நாகுமே, நீ வானளாவ உயர்த்தப்படுவாயோ? இல்லை, பாதாளம்வரை தாழ்த்தப்படுவாய். |
| 77 | Luke 11:2 | அதற்கு அவர்: நீங்கள் | அவர் அவர்களிடம், “நீங்கள் |

| | | | |
|---|---|---|---|
| | REM 15 WORDS from Lords prayer | ஜெபம்பண்ணும்போது: பரமண்டலங்களிலிருக்கிற எங்கள் பிதாவே, உம்முடைய நாமம் பரிசுத்தப்படுவதாக; உம்முடைய ராஜ்யம் வருவதாக; **உம்முடைய சித்தம் பரமண்டலத்திலே செய்யப்படுகிறதுபோல பூமியிலேயும் செய்யப்படுவதாக;** | இறைவனிடம் வேண்டும்பொழுது இவ்வாறு சொல்லுங்கள்; தந்தையே, உமது பெயர் தூயதெனப் போற்றப்பெறுக! உமது ஆட்சி வருக! |
| 78 | Luke 11:4<br><br>REM but deliver us from evil (Lord's prayer) | எங்கள் பாவங்களை எங்களுக்கு மன்னியும்; நாங்களும் எங்களிடத்தில் கடன்பட்ட எவனுக்கும் மன்னிக்கிறோமே; எங்களைச் சோதனைக்குட்படப்பண்ணாமல், **தீமையினின்று எங்களை இரட்சித்துக் கொள்ளும்,** என்று சொல்லுங்கள் என்றார். | எங்களுக்கு எதிராகக் குற்றம் செய்வோர் அனைவரையும் நாங்கள் மன்னிப்பதால் எங்கள் பாவங்களையும் மன்னியும். எங்களைச் சோதனைக்கு உட்படுத்தாதேயும். (தீயோனிடமிருந்து எங்களை விடுவித்தருளும்") என்று கற்பித்தார். |
| 79 | Luke 11:29<br><br>REM "the prophet" | ஜனங்கள் திரளாய்க் கூடிவந்திருக்கிறபொழுது அவர்: இந்தச் சந்ததியார் பொல்லாதவர்களாயிருக்கிறார்கள், அடையாளத்தைத் தேடுகிறார்கள்; ஆனாலும் **யோனா தீர்க்கதரிசியின் அடையாளமேயன்றி** வேறே அடையாளம் இவர்களுக்குக் கொடுக்கப்படுவதில்லை. | மக்கள் வந்து கூடக்கூட இயேசு கூறியது; "இந்தத் தீய தலைமுறையினர் அடையாளம் கேட்கின்றனர். இவர்களுக்கு **யோனாவின் அடையாளத்தைத்தவிர** வேறு அடையாளம் எதுவும் கொடுக்கப்பட மாட்டாது. |
| 80 | Luke 16:23<br><br>REM "hell" | பாதாளத்திலே அவன் வேதனைப்படுகிறபோது, தன் கண்களை ஏறெடுத்து, | அவர் பாதாளத்தில் வதைக்கப்பட்டபோது அண்ணாந்து பார்த்துத் |

| | | | |
|---|---|---|---|
| | | தூரத்திலே ஆபிரகாமையும் அவன் மடியிலே லாசருவையும் கண்டான். | தொலையில் ஆபிரகாமையும் அவரது மடியில் இலாசரையும் கண்டார். |
| 81 | Luke 17:36<br><br>REM ENTIRE VERSE | **வயலிலிருக்கிற இரண்டுபேரில் ஒருவன் ஏற்றுக்கொள்ளப்படுவான், மற்றவன் கைவிடப்படுவான் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.** | (இருவர் வயலில் இருப்பர். ஒருவர் எடுத்துக் கொள்ளப்படுவார்; மற்றவர் விட்டு விடப்படுவார். ") |
| 82 | Luke 21:4<br><br>REM "cast in unto the offerings of God" | அவர்களெல்லாரும் தங்கள் பரிபூரணத்திலிருந்தெடுத்து **தேவனுக்கென்று காணிக்கை போட்டார்கள்**; இவளோ தன் வறுமையிலிருந்து தன் ஜீவனத்துக்கு உண்டாயிருந்ததெல்லாம் போட்டுவிட்டாள் என்றார். | ஏனெனில் அவர்கள் அனைவரும் தங்களுக்கு இருந்த மிகுதியான செல்வத்திலிருந்து **காணிக்கை போட்டனர்.** இவரோ தமக்குப் பற்றாக்குறை இருந்தும் தம் பிழைப்புக்காக வைத்திருந்த எல்லாவற்றையுமே போட்டுவிட்டார்" என்றார். |
| 83 | Luke 21:8<br><br>CHG I am Christ TO I am He, the One | அதற்கு அவர்: நீங்கள் வஞ்சிக்கப்படாதபடிக்கு எச்சரிக்கையாயிருங்கள்; ஏனெனில் அநேகர் வந்து என் நாமத்தைத் தரித்துக்கொண்டு: **நான்தான் கிறிஸ்து என்றும்**, காலம் சமீபித்தது என்றும் சொல்லுவார்கள்; அவர்களைப் பின்பற்றாதிருங்கள். | அதற்கு அவர், "நீங்கள் ஏமாறாதவாறு பார்த்துக்கொள்ளுங்கள்; ஏனெனில் பலர் என் பெயரை வைத்துக்கொண்டு வந்து, **"நானே அவர்"** என்றும், "காலம் நெருங்கி வந்துவிட்டது" என்றும் கூறுவார்கள்; அவர்கள் பின்னே போகாதீர்கள். |
| 84 | Luke 22:64<br><br>REM "they struck him on the face" | அவருடைய கண்களைக் கட்டி, **அவருடைய முகத்தில் அறைந்து:** உன்னை அடித்தவன் யார், அதை ஞானதிருஷ்டியினால் சொல் | அவரது முகத்தை மூடி, "உன்னை அடித்தவர் யார்? இறைவாக்கினனே, சொல்" என்று கேட்டார்கள். |

| | | என்று அவரைக் கேட்டதுமன்றி, | |
|---|---|---|---|
| 85 | Luke 23:17<br><br>REM ENTIRE VERSE | **பண்டிகைதோறும் அவர்களுக்கு ஒருவனை அவன் விடுதலையாக்குவது அவசியமாயிருந்தபடியால் அப்படிச் சொன்னான்.** | (விழாவின்போது அவர்களுக்கென ஒரு கைதியை விடுவிக்க வேண்டிய கட்டாயம் அவனுக்கு இருந்தது.) |
| 86 | Luke 23:38<br><br>REM "letters of Greek,Latin, Hebrew" | **இவன் யூதருடைய ராஜா என்று, கிரேக்கு, லத்தீன், எபிரெயு எழுத்துக்களில்** எழுதி, அவருக்கு மேலாக வைக்கப்பட்டது. | **"இவன் யூதரின் அரசன்" என்று** அவரது சிலுவையின் மேல் எழுதி வைக்கப்பட்டிருந்தது. |
| 87 | Luke 23:42<br><br>REM "Lord" (thief on the cross - getting saved!) | இயேசுவை நோக்கி: **ஆண்டவரே, நீர் உம்முடைய ராஜ்யத்தில்** வரும்போது அடியேனை நினைத்தருளும் என்றான். | பின்பு அவன், **"இயேசுவே, நீர் ஆட்சியுரிமை** பெற்று வரும்போது என்னை நினைவிற்கொள்ளும்" என்றான். |
| 88 | Luke 24:6<br><br>REM "He is not here, but is risen" | **அவர் இங்கே இல்லை, அவர் உயிர்த்தெழுந்தார்.** மனுஷகுமாரன் பாவிகளான மனுஷர் கைகளில் ஒப்புக்கொடுக்கப்படவும், சிலுவையில் அறையப்படவும், மூன்றாம் நாளில் எழுந்திருக்கவும் வேண்டுமென்பதாக அவர் கலிலேயாவிலிருந்த காலத்தில் உங்களுக்குச் சொன்னதை நினைவுகூருங்கள் என்றார்கள். | அவர் இங்கே இல்லை. **அவர் உயிருடன் எழுப்பப்பட்டார்.** கலிலேயாவில் இருக்கும்போது அவர் உங்களுக்குச் சொன்னதை நினைவுப்படுத்திக் கொள்ளுங்கள். மானிடமகன் பாவிகள் கையில் ஒப்புவிக்கப்பட்டுச் சிலுவையில் அறையப்படவேண்டும்; மூன்றாம் நாளில் உயிர்த்தெழ வேண்டும் என்று சொன்னாரே" என்றார்கள். |

| 89 | Luke 24:49<br><br>REM "of Jerusalem" | என் பிதா வாக்குத்தத்தம்பண்ணினதை, இதோ, நான் உங்களுக்கு அனுப்புகிறேன். நீங்களோ உன்னதத்திலிருந்து வரும் **பெலனால் தரிப்பிக்கப்படும்வரைக்கும் எருசலேம் நகரத்தில்** இருங்கள் என்றார். | இதோ, என் தந்தை வாக்களித்த வல்லமையை நான் உங்களுக்கு அனுப்புகிறேன். நீங்கள் உன்னதத்திலிருந்து வரும் அவ்வல்லமையால் **ஆட்கொள்ளப்படும்வரை இந்நகரத்திலேயே** இருங்கள்" என்றார். |
|---|---|---|---|
| 90 | John 1:14, 18<br><br>REM "begotten"(refers to Jesus) | அந்த வார்த்தை மாம்சமாகி, கிருபையினாலும் சத்தியத்தினாலும் நிறைந்தவராய், நமக்குள்ளே வாசம் பண்ணினார்; அவருடைய மகிமையைக் கண்டோம்; **அது பிதாவுக்கு ஒரேபேறானவருடைய மகிமைக்கு** ஏற்ற மகிமையாகவே இருந்தது.தேவனை ஒருவனும் ஒருக்காலுங் கண்டதில்லை, பிதாவின் மடியிலிருக்கிற ஒரேபேறான குமாரனே அவரை வெளிப்படுத்தினார். | வாக்கு மனிதர் ஆனார்; நம்மிடையே குடிகொண்டார். அவரது மாட்சியை நாங்கள் கண்டோம். அருளும் உண்;மையும் நிறைந்து விளங்கிய **அவர் தந்தையின் ஒரே மகன் என்னும் நிலையில்** இம்மாட்சியைப் பெற்றிருந்தார்.கடவுளை யாரும் என்றுமே கண்டதில்லை; தந்தையின் நெஞ்சத்திற்கு நெருக்கமானவரும் கடவுள்தன்மை கொண்டவருமான ஒரே மகனே அவரை வெளிப்படுத்தியுள்ளார். |
| 91 | John 1:27<br><br>REM "is preferred before me" | **அவர் எனக்குப் பின்வந்தும் என்னிலும் மேன்மையுள்ளவர்;** அவருடைய பாதரட்சையின் வாரை அவிழ்ப்பதற்கும் நான் பாத்திரனல்ல என்றான். | **அவர் எனக்குப்பின் வருபவர்;** அவருடைய மிதியடிவாரை அவிழ்க்கக்கூட எனக்குத் தகுதியில்லை" என்றார். |
| 92 | John 3:13<br><br>REM "which is in heaven" | பரலோகத்திலிருந்திறங்கினவரும் **பரலோகத்திலிருக்கிறவருமான மனுஷகுமாரனேயல்லாமல்** | "விண்ணகத்திலிருந்து இறங்கி வந்துள்ள **மானிட மகனைத் தவிர வேறு** எவரும் விண்ணகத்திற்கு ஏறிச் |

| | (refers to Jesus) | பரலோகத்துக்கு ஏறினவன் ஒருவனுமில்லை. | சென்றதில்லை. |
|---|---|---|---|
| 93 | John 3:15<br><br>REM "should not perish" (believeth in him...) | தன்னை விசுவாசிக்கிறவன் எவனோ **அவன் கெட்டுப்போகாமல் நித்தியஜீவனை அடையும்படிக்கு,** உயர்த்தப்படவேண்டும். | அப்போது அவரிடம் நம்பிக்கை கொள்ளும் **அனைவரும் நிலைவாழ்வு** பெறுவர். |
| 94 | John 3:16<br><br>REM "begotten" | தேவன், தம்முடைய **ஒரேபேறான குமாரனை விசுவாசிக்கிறவன்** எவனோ அவன் கெட்டுப்போகாமல் நித்தியஜீவனை அடையும்படிக்கு, அவரைத் தந்தருளி, இவ்வளவாய் உலகத்தில் அன்பு கூர்ந்தார். | **தம் ஒரே மகன் மீது** நம்பிக்கை கொள்ளும் எவரும் அழியாமல் நிலைவாழ்வு பெறும் பொருட்டு அந்த மகனையே அளிக்கும் அளவுக்குக் கடவுள் உலகின்மேல் அன்பு கூர்ந்தார். |
| 95 | John 3:18<br><br>REM "begotten" | அவரை விசுவாசிக்கிறவன் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படான்; விசுவாசியாதவனோ, **தேவனுடைய ஒரேபேறான குமாரனுடைய நாமத்தில்** விசுவாசமுள்ளவனாயிராதபடியினால், அவன் ஆக்கினைத் தீர்ப்புக்குட்பட்டாயிற்று. | அவர்மீது நம்பிக்கை கொள்வோர் தண்டனைத் தீர்ப்புக்கு ஆளாவதில்லை; ஆனால் நம்பிக்கை கொள்ளாதோர் ஏற்கெனவே தீர்ப்புப் பெற்றுவிட்டனர். ஏனெனில் அவர்கள் **கடவுளின் ஒரே மகனிடம்** நம்பிக்கை கொள்ளவில்லை. |
| 96 | John 4:24<br><br>CHG God is a Spirit TO God is Spirit | **தேவன் ஆவியாயிருக்கிறார்,** அவரைத் தொழுதுகொள்ளுகிறவர்கள் ஆவியோடும் உண்மையோடும் அவரைத் தொழுதுகொள்ளவேண்டும் என்றார். | **கடவுள் உருவமற்றவர்.** அவரை வழிபடுவோர் அவரது உண்மை இயல்புக்கு ஏற்ப உள்ளத்தில்தான் வழிபட வேண்டும்” என்றார். |

| 97 | John 4:42<br><br>REM "the Christ" | அந்த ஸ்திரீயை நோக்கி: உன் சொல்லினிமித்தம் அல்ல, அவருடைய உபதேசத்தை நாங்களே கேட்டு, **அவர் மெய்யாய்க் கிறிஸ்துவாகிய உலகரட்சகர்** என்று அறிந்து விசுவாசிக்கிறோம் என்றார்கள். | அவர்கள் அப்பெண்ணிடம், “இப்போது உன் பேச்சைக் கேட்டு நாங்கள் நம்பவில்லை; நாங்களே அவர் பேச்சைக் கேட்டோம். **அவர் உண்மையிலே உலகின் மீட்பர்** என அறிந்து கொண்டோம்” என்றார்கள். |
|---|---|---|---|
| 98 | John 5:3<br><br>REM LAST 7 WORDS | அவைகளிலே குருடர், சப்பாணிகள், சூம்பின உறுப்புடையவர்கள் முதலான வியாதிக்காரர் **அநேகர் படுத்திருந்து, தண்ணீர் எப்பொழுது கலங்கும் என்று காத்துக்கொண்டிருப்பார்கள்.** | இம்மண்டபங்களில் உடல்நலமற்றோர், பார்வையற்றோர், கால் ஊனமுற்றோர், முடக்குவாதமுற்றோர் ஆகியோர் திரளாய்ப்படுத்துக்கிடப்பர். (இவர்கள் குளத்து நீர் கலங்குவதற்காகக் காத்திருப்பார்கள்.) |
| 99 | John 5:4<br><br>REM ENTIRE VERSE | **ஏனெனில் சில சமயங்களிலே தேவதூதன் ஒருவன் அந்தக் குளத்தில் இறங்கி, தண்ணீரைக் கலக்குவான்; தண்ணீர் கலங்கினபின்பு யார் முந்தி அதில் இறங்குவானோ அவன் எப்பேர்ப்பட்ட வியாதிஸ்தனாயிருந்தாலும் சொஸ்தமாவான்.** | (ஏனெனில் ஆண்டவரின் தூதர் சில வேளைகளில் அக்குளத்தினுள் இறங்கித் தண்ணீரைக் கலக்குவார். தண்ணீர் கலங்கியபின் முதலில் இறங்குபவர் எவ்வித நோயுற்றிருந்தாலும் நலமடைவார்.) |
| 100 | John 5:16<br><br>REM "and sought to slay him" | இயேசு இவைகளை ஓய்வுநாளில் செய்தபடியால், யூதர்கள் அவரைத் துன்பப்படுத்தி, **அவரைக் கொலைசெய்ய வகைதேடினார்கள்.** | ஓய்வுநாளில் இயேசு இதைச் செய்ததால் யூதர்கள் அவரைத் துன்புறுத்தினார்கள். |

| 101 | John 5:29<br><br>CHG damnation TO condemn, judgement | அப்பொழுது, நன்மைசெய்தவர்கள் ஜீவனை அடையும்படி எழுந்திருக்கிறவர்களாகவும், **தீமைசெய்தவர்கள் ஆக்கினையை அடையும்படி** எழுந்திருக்கிறவர்களாகவும் புறப்படுவார்கள். | வெளியே வருவர். நல்லன செய்தோர் வாழ்வு பெற உயிர்த்தெழுவர்; **தீயன செய்தோர் தண்டனைத் தீர்ப்புப் பெற** உயிர்த்தெழுவர். |
|---|---|---|---|
| 102 | John 6:47<br><br>REM "on Me" (He that believeth…) | **என்னிடத்தில் விசுவாசமாயிருக்கிறவனுக்கு நித்தியஜீவன்** உண்டென்று **மெய்யாகவே மெய்யாகவே** உங்களுக்குச் சொல்லுகிறேன். | உறுதியாக உங்களுக்குச் சொல்கிறேன்; என்னை நம்புவோர் நிலைவாழ்வைக் கொண்டுள்ளனர். |
| 103 | John 6:69<br><br>CHG "Christ, the Son of the living God" TO "Holy One of God" | **நீர் ஜீவனுள்ள தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்து** என்று நாங்கள் விசுவாசித்தும் அறிந்தும் இருக்கிறோம் என்றான். | **நீரே கடவுளுக்கு அர்ப்பணமானவர்** என்பதை நாங்கள் அறிந்து கொண்டோம். அதை நம்புகிறோம்" என்றார். |
| 104 | John 7:53-8:11<br><br>REM VERSES 7:53 - 8:11<br><br>Verse in brackets is asterisked in footnotes as not found in | 53 பின்பு அவரவர் தங்கள் தங்கள் வீட்டுக்குப் போனார்கள்.<br>John 8:1-11<br>1 இயேசு ஒலிவமலைக்குப் போனார்.<br>2 மறுநாள் காலையிலே அவர் திரும்பி தேவாலயத்திற்கு வந்தபோது, ஜனங்களெல்லாரும் அவரிடத்தில் வந்தார்கள். அவர் உட்கார்ந்து | John 7:53 -John 8:11(அவர்கள் ஒவ்வொருவரும் அவரவர் வீட்டுக்குச் சென்றார்கள்.இயேசு ஒலிவ மலைக்குச் சென்றார்.<br><br>2 பொழுது விடிந்ததும் அவர் மீண்டும் கோவிலுக்கு வந்தார். அப்போது மக்கள் அனைவரும் அவரிடம் வந்தனர். அவரும் அங்கு அமர்ந்து அவர்களுக்குக் கற்பித்தார். |

|  |  |  |  |
|---|---|---|---|
|  | important texts in modern versions and missing in maintexts too in some instances to create doubts in the minds of the reader! | அவர்களுக்கு உபதேசம்பண்ணினார்.<br>3 அப்பொழுது விபசாரத்திலே கண்டுபிடிக்கப்பட்ட ஒரு ஸ்திரீயை வேதபாரகரும் பரிசேயரும் அவரிடத்தில் கொண்டுவந்து, அவளை நடுவே நிறுத்தி:<br>4 போதகரே, இந்த ஸ்திரீ விபசாரத்தில் கையும் மெய்யுமாய்ப் பிடிக்கப்பட்டாள்.<br>5 இப்படிப்பட்டவர்களைக் கல்லெறிந்து கொல்லவேண்டுமென்று மோசே நியாயப்பிரமாணத்தில் நமக்குக் கட்டளையிட்டிருக்கிறாரே, நீர் என்ன சொல்லுகிறீர் என்றார்கள்.<br>6 அவர்மேல் குற்றஞ்சுமத்துவதற்கான காரணம் உண்டாகும்பொருட்டு அவரைச் சோதிக்கும்படி இப்படிச் சொன்னார்கள் இயேசுவோ குனிந்து, விரலினால் தரையிலே எழுதினார்.<br>7 அவர்கள் ஓயாமல் அவரைக் கேட்டுக்கொண்டிருக்கையில், அவர் நிமிர்ந்துபார்த்து: உங்களில் பாவமில்லாதவன் | 3 மறைநூல் அறி;ஞரும் பரிசேயரும் விபசாரத்தில் பிடிபட்ட ஒரு பெண்ணைக் கூட்டிக் கொண்டு வந்து நடுவில் நிறுத்தி,<br><br>4 “போதகரே, இப்பெண் விபச்சாரத்தில் கையும் மெய்யுமாகப் பிடிப்பட்டவள்.<br><br>5 இப்படிப்பட்டவர்களைக் கல்லால் எறிந்து கொல்ல வேண்டும் என்பது மோசே நமக்குக் கொடுத்த திருச்சட்டத்திலுள்ள கட்டளை. நீர் என்ன சொல்கிறீர்?” என்று கேட்டனர்.<br><br>6 அவர்மேல் குற்றம் சுமத்த ஏதாவது வேண்டும் என்பதற்காக அவர்கள் இவ்வாறு கேட்டுச் சோதித்தார்கள். இயேசு குனிந்து விரலால் தரையில் எழுதிக்கொண்டிருந்தார்.<br><br>7 ஆனால் அவர்கள் அவரை விடாமல் கேட்டுக்கொண்டிருந்ததால், அவர் நிமிர்ந்து பார்த்து, “உங்களுள் பாவம் இல்லாதவர் முதலில் இப்பெண்மேல் கல் எறியட்டும்” என்று |

| | | இவள்மேல் முதலாவது கல்லெறியக்கடவன் என்று சொல்லி,<br>8 அவர் மறுபடியும் குனிந்து, தரையிலே எழுதினார்.<br>9 அவர்கள் அதைக் கேட்டு, தங்கள் மனச்சாட்சியினால் கடிந்துகொள்ளப்பட்டு, பெரியோர்முதல் சிறியோர்வரைக்கும் ஒவ்வொருவராய்ப் போய்விட்டார்கள். இயேசு தனித்திருந்தார், அந்த ஸ்திரீ நடுவே நின்றாள்.<br>10 இயேசு நிமிர்ந்து அந்த ஸ்திரீயைத் தவிர வேறொருவரையும் காணாமல்: ஸ்திரீயே, உன்மேல் குற்றஞ்சாட்டினவர்கள் எங்கே? ஒருவனாகிலும் உன்னை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கவில்லையா என்றார்.<br>11 அதற்கு அவள்: இல்லை, ஆண்டவரே, என்றாள். இயேசு அவளை நோக்கி: நானும் உன்னை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கிறதில்லை; நீ போ, இனிப் பாவஞ்செய்யாதே என்றார். | அவர்களிடம் கூறினார்.<br><br>8 மீண்டும் குனிந்து தரையில் எழுதிக் கொண்டிருந்தார்.<br><br>9 அவர் சொன்னதைக் கேட்டதும் முதியோர் தொடங்கி ஒருவர் பின் ஒருவராக அவர்கள் யாவரும் அங்கிருந்து சென்று விட்டார்கள். இறுதியாக இயேசு மட்டுமே அங்கு இருந்தார். அப்பெண்ணும் அங்கேயே நின்று கொண்டிருந்தார்.<br><br>10 இயேசு நிமிர்ந்து பார்த்து, “அம்மா, அவர்கள் எங்கே? நீர் குற்றவாளி என்று எவரும் தீர்ப்பிடவில்லையா?” என்று கேட்டார்.<br><br>11 அவர், “இல்லை, ஐயா” என்றார். இயேசு அவரிடம் “நானும் தீர்ப்பு அளிக்கவில்லை. நீர் போகலாம். இனிப் பாவம் செய்யாதீர்” என்றார்.) |
|---|---|---|---|
| 105 | John 8:9 | அவர்கள் அதைக் கேட்டு, | அவர் சொன்னதைக் கேட்டதும் |

| | REM "being convicted by their own conscience" | **தங்கள் மனச்சாட்சியினால் கடிந்துகொள்ளப்பட்டு,** பெரியோர்முதல் சிறியோர்வரைக்கும் ஒவ்வொருவராய்ப் போய்விட்டார்கள். இயேசு தனித்திருந்தார், அந்த ஸ்திரீ நடுவே நின்றாள். | முதியோர் தொடங்கி ஒருவர் பின் ஒருவராக அவர்கள் யாவரும் அங்கிருந்து சென்று விட்டார்கள். இறுதியாக இயேசு மட்டுமே அங்கு இருந்தார். அப்பெண்ணும் அங்கேயே நின்று கொண்டிருந்தார். |
|---|---|---|---|
| 106 | John 8:47<br><br>REM "heareth God's words" TO "hears what God says" | தேவனால் உண்டானவன் தேவனுடைய **வசனங்களுக்குச்** செவிகொடுக்கிறான்; நீங்கள் தேவனால் உண்டாயிராதபடியினால் செவிகொடாமலிருக்கிறீர்கள் என்றார். | கடவுளைச் சார்ந்தவர் கடவுளின் **சொல்லுக்குச்** செவிசாய்க்கிறார்; நீங்கள் கடவுளைச் சார்ந்தவர்கள் அல்ல. ஆதலால் அவர் சொல்லுக்குச் செவி சாய்ப்பதில்லை. " |
| 107 | John 8:59<br><br>REM LAST 10 WORDS "going through the midst... | அப்பொழுது அவர்மேல் எறியும்படி கல்லுகளை எடுத்துக்கொண்டார்கள். இயேசு மறைந்து, **அவர்கள் நடுவே கடந்து,** தேவாலயத்தை விட்டுப்போனார். | இதைக் கேட்ட அவர்கள் அவர்மேல் எறியக் கற்களை எடுத்தார்கள். ஆனால் இயேசு மறைவாக **நழுவிக்** கோவிலிலிருந்து வெளியேறினார். |
| 108 | John 9:4<br><br>CHG "I must work the works" TO "We must work the works" | பகற்காலமிருக்குமட்டும் **நான் என்னை அனுப்பினவருடைய கிரியைகளைச் செய்யவேண்டும்;** ஒருவனும் கிரியை செய்யக்கூடாத இராக்காலம் வருகிறது. | பகலாய் இருக்கும் வரை என்னை அனுப்பியவரின் செயலை **நாம் செய்ய வேண்டியிருக்கிறது.** இரவு வருகிறது; அப்போது யாரும் செயலாற்ற இயலாது. |
| 109 | John 9:35 | அவனை அவர்கள் புறம்பே | யூதர்கள் அவரை வெளியே |

| | | | |
|---|---|---|---|
| | CHG "Son of God" TO Son of Man , Messiah | தள்ளிவிட்டதை இயேசு கேள்விப்பட்டு, அவனைக் கண்டபோது: **நீ தேவனுடைய குமாரனிடத்தில் விசுவாசமாயிருக்கிறாயா என்றார்.** | தள்ளிவிட்டதைப்பற்றி இயேசு கேள்விப்பட்டார்; பின் அவரைக் கண்டபோது, **"மானிடமகனிடம் நீர் நம்பிக்கை கொள்கிறீரா?"** என்று கேட்டார். |
| 110 | John 11:41<br><br>REM "For the place where the dead was laid" | **அப்பொழுது மரித்தவன் வைக்கப்பட்ட இடத்திலிருந்த கல்லை எடுத்துப்போட்டார்கள்.** இயேசு தம்முடைய கண்களை ஏறெடுத்து: பிதாவே, நீர் எனக்குச் செவிகொடுத்தபடியினால் உம்மை ஸ்தோத்திரிக்கிறேன். | **அப்போது அவர்கள் கல்லை அகற்றினார்கள்.** இயேசு அண்ணாந்து பார்த்து, "தந்தையே, நீர் என் வேண்டுதலுக்குச் செவிசாய்த்ததற்காக உமக்கு நன்றி கூறுகிறேன். |
| 111 | John 14:2<br><br>CHG "mansions" TO "rooms", "dwelling places" | என் பிதாவின் வீட்டில் **அநேக வாசஸ்தலங்கள் உண்டு;** அப்படியில்லாதிருந்தால், நான் உங்களுக்குச் சொல்லியிருப்பேன்; ஒரு ஸ்தலத்தை உங்களுக்காக ஆயத்தம்பண்ணப்போகிறேன். | தந்தை வாழும் இடத்தில் **உறைவிடங்கள் பல உள்ளன.** அப்படி இல்லையெனில், "உங்களுக்கு இடம் ஏற்பாடு செய்யப்போகிறேன்" என்று சொல்லியிருப்பேனா? |
| 112 | John 14:16<br><br>CHG Comforter TO Helper, Counselor, et. al. | நான் பிதாவை வேண்டிக்கொள்ளுவேன், அப்பொழுது என்றென்றைக்கும் உங்களுடனேகூட இருக்கும்படிக்குச் **சத்திய ஆவியாகிய வேறொரு தேற்றரவாளனை** அவர் உங்களுக்குத் தந்தருளுவார். | "உங்களோடு என்றும் இருக்கும் படி **மற்றொரு துணையாளரை** உங்களுக்கத் தருமாறு நான் தந்தையிடம் கேட்பேன். |

| 113 | John 16:16<br><br>REM "because I go to the Father" | **நான் பிதாவினிடத்திற்குப் போகிறபடியினால்** கொஞ்சக்காலத்திலே என்னைக் காணாதிருப்பீர்கள், மறுபடியும் கொஞ்சக்காலத்திலே என்னைக் காண்பீர்கள் என்றார். | "இன்னும் சிறிது காலத்தில் நீங்கள் என்னைக் காணமாட்டீர்கள்; மீண்டும் சிறிது காலத்தில் என்னைக் காண்பீர்கள். " |
|---|---|---|---|
| 114 | John 17:12<br><br>REM "in the world" | **நான் அவர்களுடனேகூட உலகத்திலிருக்கையில்** அவர்களை உம்முடைய நாமத்தினாலே காத்துக்கொண்டேன்; நீர் எனக்குத் தந்தவர்களைக் காத்துக்கொண்டுவந்தேன்; வேதவாக்கியம் நிறைவேறத்தக்கதாக, கேட்டின் மகன் கெட்டுப்போனானேயல்லாமல், அவர்களில் ஒருவனும் கெட்டுப்போகவில்லை. | **நான் அவர்களோடு இருந்தபோது** நீர் எனக்கு அளித்த உம் பெயரின் ஆற்றலால் அவர்களைக் காத்து வந்தேன்; நன்கு பாதுகாத்தேன். அவர்களுள் எவரும் அழிவுறவில்லை. மறைநூலில் எழுதியுள்ளது நிறைவேறும் வண்ணம் அழிவுக்குரியவன் மட்டுமே அழிவுற்றான். |
| 115 | Acts 1:3<br><br>CHG "infallible" TO "convincing" et al. | அவர் பாடுபட்டபின்பு, நாற்பது நாளளவும் அப்போஸ்தலருக்குத் தரிசனமாகி, தேவனுடைய ராஜ்யத்துக்குரியவைகளை அவர்களுடனே பேசி, அநேகம் **தெளிவான திருஷ்டாந்தங்களினாலே** அவர்களுக்குத் தம்மை உயிரோடிருக்கிறவராகக் காண்பித்தார். | இயேசு துன்புற்று இறந்தபின்பு நாற்பது நாள்களாக அவர்களுக்குத் தோன்றி, இறையாட்சியைப் பற்றிக் கற்பித்தார்; பல **தெளிவான சான்றுகளால்** தாம் உயிரோடு இருப்பதைக் காண்பித்தார். |
| 116 | Acts 2:30 | அவன் தீர்க்கதரிசியாயிருந்து: | அவர் இறைவாக்கினர் |

| | | | |
|---|---|---|---|
| | REM "he would raise up Christ | உன் சிங்காசனத்தில் **வீற்றிருக்க மாம்சத்தின்படி உன் சந்ததியிலே கிறிஸ்துவை எழும்பப்பண்ணுவேன்** என்று தேவன் தனக்குச் சத்தியம்பண்ணினதை அறிந்தபடியால், | என்பதால், **தம் வழித்தோன்றல் ஒருவர் அவரது அரியணையில் வீற்றிருப்பார்** என்று கடவுள் உறுதியாக ஆணையிட்டுக் கூறியதை அறிந்திருந்தார். |
| 117 | Acts 2:31<br><br>REM "hell" | அவன் கிறிஸ்துவினுடைய ஆத்துமா பாதாளத்திலே விடப்படுவதில்லையென்றும், அவருடைய மாம்சம் அழிவைக் காண்பதில்லையென்றும் முன்னறிந்து, அவர் உயிர்த்தெழுதலைக்குறித்து இப்படிச் சொன்னான். | அவர் கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலை முன்னறிந்து, 'அவரைப் பாதாளத்திடம் ஒப்புவிக்கமாட்டீர்; அவரது உடல் படுகுழியைக் காணவிடமாட்டீர்' என்று கூறியிருக்கிறார். |
| 118 | Acts 2:38<br><br>CHG remission of sins TO forgiveness of sins | பேதுரு அவர்களை நோக்கி: நீங்கள் மனந்திரும்பி, ஒவ்வொருவரும் பாவமன்னிப்புக்கென்று இயேசுகிறிஸ்துவின் நாமத்தினாலே ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ளுங்கள், அப்பொழுது பரிசுத்த ஆவியின் வரத்தைப் பெறுவீர்கள். | அதற்குப் பேதுரு, அவர்களிடம், "நீங்கள் மனம் மாறுங்கள். உங்கள் பாவங்களிலிருந்து மன்னிப்புப் பெறுவதற்காக ஒவ்வொருவரும் இயேசு கிறிஸ்துவின் பெயரால் திருமுழுக்குப் பெறுங்கள். அப்பொழுது தூய ஆவியைக் கொடையாகப் பெறுவீர்கள். |
| 119 | Acts 4:27,30<br><br>CHG "holy child" TO "holy servant" (attacks deity) | அந்தப்படி உம்முடைய கரமும் உம்முடைய ஆலோசனையும் முன்குறித்தவைகள் யாவையும் செய்யும்படி,உம்முடைய **பரிசுத்த பிள்ளையாகிய** | அதன்படியே இந்நகரில் உம்மால் அருள்பொழிவு பெற்ற உமது **தூய ஊழியராகிய இயேசுவுக்கு** எதிராக ஏரோதும் பொந்தியு பிலாத்தும் பிற இனத்தவரோடும் இஸ்ரயேல் மக்களோடும் |

|  |  |  |  |
|---|---|---|---|
|  |  | **இயேசுவின்** நாமத்தினாலே அடையாளங்களும் அற்புதங்களும் நடக்கும்படி செய்து, பிணியாளிகளைக் குணமாக்கும்படி உம்முடைய கரத்தை நீட்டி, உம்முடைய ஊழியக்காரர் உம்முடைய வசனத்தை முழு தைரியத்தோடும் சொல்லும்படி அவர்களுக்கு அநுக்கிரகஞ்செய்தருளும் என்றார்கள். | ஒன்றுதிரண்டனர்.உமது தூய ஊழியர் இயேசுவின் பெயரால் உமது கையை நீட்டி நோயுற்றோருக்கு நலமளியும்; அடையாளங்களும் அருஞ் செயல்களும் நடைபெறச் செய்யும்." |
| 120 | Acts 7:30<br><br>REM "of the Lord" (angel of the Lord) | நாற்பது வருஷம் சென்றபின்பு, சீனாய்மலையின் வனாந்தரத்திலே **கர்த்தருடைய தூதனானவர்** முட்செடி எரிகிற அக்கினிஜுவாலையிலே அவனுக்குத் தரிசனமானார். | நாற்பது ஆண்டுகளுக்குப் பின்னர் ஆண்டவரின் தூதர் சீனாய் மலை அருகே உள்ள பாலைநிலத்தில் ஒரு முட்புதர் நடுவே தீப்பிழம்பில் தோன்றினார். |
| 121 | Acts 7:37<br><br>REM "Him shall ye hear" | இஸ்ரவேல் புத்திரரை நோக்கி: உங்கள் தேவனாகிய கர்த்தர் உங்கள் சகோதரரிலிருந்து என்னைப்போல ஒரு தீர்க்கதரிசியை உங்களுக்காக எழும்பப்பண்ணுவார், **அவருக்குச் செவிகொடுப்பீர்களாக என்று சொன்னவன் இந்த மோசேயே.** | "கடவுள் என்னைப்போன்ற இறைவாக்கினர் ஒருவரைச் சகோதரர்களாகிய உங்கள் நடுவிலிருந்து தோன்றச் செய்வார்" **என்று இஸ்ரயேல் மக்களிடம் கூறியதும் இதே மோசேதான்.** |
| 122 | Acts 8:37<br><br>REM ENTIRE | அதற்குப் பிலிப்பு: நீர் முழு இருதயத்தோடும் விசுவாசித்தால் | "அதற்குப் பிலிப்பு, "நீர் முழு உள்ளத்தோடு நம்பினால் தடையில்லை" என்றார். உடனே |

| | VERSE (major salvation verse) | தடையில்லையென்றான். அப்பொழுது அவன்: இயேசு கிறிஸ்துவைத் தேவனுடைய குமாரனென்று விசுவாசிக்கிறேன் என்று சொல்லி; | அவர், "இயேசு கிறிஸ்து இறைமகன் என்று நம்புகிறேன்" என்றார். (Missing in main text; given in footnotes) |
|---|---|---|---|
| 123 | Acts 9:5<br><br>REM "it is hard for thee to kick against the pricks | அதற்கு அவன்: ஆண்டவரே, நீர் யார், என்றான். அதற்குக் கர்த்தர்: நீ துன்பப்படுத்துகிற இயேசு நானே; **முள்ளில் உதைக்கிறது உனக்குக் கடினமாம் என்றார்.** | அதற்கு அவர், "ஆண்டவரே நீர் யார்?" எனக்கேட்டார். ஆண்டவர், "நீ துன்புறுத்தும் இயேசு நானே. |
| 124 | Acts 10:6<br><br>REM "he shall tell thee what thou oughtest to do" | அவன் தோல் பதனிடுகிறவனாகிய சீமோன் என்னும் ஒருவனிடத்தில் தங்கியிருக்கிறான்; அவனுடைய வீடு கடலோரத்திலிருக்கிறது. **நீ செய்யவேண்டியதை அவன் உனக்குச் சொல்லுவான் என்றான்.** | தோல் பதனிடும் சீமோன் என்பவரின் வீட்டில் அவர் விருந்தினராய் தங்கியிருக்கிறார். அவர் வீடு கடலோரத்தில் உள்ளது" என்றார். |
| 125 | Acts 15:11<br><br>REM "Christ" | கர்த்தராகிய **இயேசுகிறிஸ்துவின்** கிருபையினாலே அவர்கள் இரட்சிக்கப்படுகிறது எப்படியோ, அப்படியே நாமும் இரட்சிக்கப்படுவோமென்று நம்பியிருக்கிறோமே என்றான். | ஆண்டவர் **இயேசுவின்** அருளால் நாம் மீட்புப் பெறுவதுபோலவே அவர்களும் மீட்புப் பெறுகிறார்கள் என நம்புகிறோம்." |
| 126 | Acts 15:18 | **உலகத்தோற்றமுதல்** | **தொடக்கத்திலிருந்தே** இதனை |

|  |  |  |  |
|---|---|---|---|
|  | CHG beginning of the world TO ...eternity, ...ages | **தேவனுக்குத்** தம்முடைய கிரியைகளெல்லாம் தெரிந்திருக்கிறது. | அவர் தெரியப்படுத்தியுள்ளார். |
| 127 | Acts 15:34<br><br>REM ENTIRE VERSE | ஆகிலும் சீலாவுக்கு அங்கே தரித்திருக்கிறது நலமாய்க் கண்டது. | Verse OMITTED |
| 128 | Acts 16:31<br><br>REM "Christ" (Believe on the Lord Jesus Christ) | அதற்கு அவர்கள்: கர்த்தராகிய **இயேசுகிறிஸ்துவை** விசுவாசி, அப்பொழுது நீயும் உன் வீட்டாரும் இரட்சிக்கப்படுவீர்கள் என்று சொல்லி, | அதற்க அவர்கள், "ஆண்டவராகிய **இயேசுவின்** மேல் நம்பிக்கை கொள்ளும்; அப்பொழுது நீரும் உம் வீட்டாரும் மீட்படைவீர்கள்" என்றார்கள். |
| 129 | Acts 17:16<br><br>CHG "stirred" TO "provoked", distressed et al. | அத்தேனே பட்டணத்தில் பவுல் அவர்களுக்காகக் காத்துக்கொண்டிருக்கையில், அந்தப் பட்டணம் விக்கிரகங்களால் நிறைந்திருக்கிறதைக் கண்டு, **தன் ஆவியில் மிகுந்த வைராக்கியமடைந்து,** | பவுல் அவர்களுக்காக ஏதென்சில் காத்திருந்தபோது, அந்நகரில் சிலைகள் நிறைந்திருப்பதைக் கண்டு **மனம் கலங்கினார்.** |
| 130 | Acts 17:22<br><br>CHG "Mars Hill" TO" Areopagus" | அப்பொழுது பவுல் **மார்ஸ் மேடையின் நடுவிலே** நின்று: அத்தேனரே, எந்த விஷயத்திலும் நீங்கள் மிகுந்த தேவதாபக்தியுள்ளவர்களென்று காண்கிறேன். | **அரயோப்பாகு மன்றத்தின் நடுவில்** பவுல் எழுந்து நின்று கூறியது; "ஏதென்சு நகர மக்களே, நீங்கள் மிகுந்த சமயப் பற்றுள்ளவர்கள் என்பதை நான் காண்கிறேன். |
| 131 | Acts 17:22 | அப்பொழுது பவுல் மார்ஸ் மேடையின் நடுவிலே நின்று: | அரயோப்பாகு மன்றத்தின் நடுவில் பவுல் எழுந்து நின்று |

|  |  |  |  |
|---|---|---|---|
|  | REM "superstitious" TO "religious" | அத்தேனரே, எந்த விஷயத்திலும் நீங்கள் **மிகுந்த தேவதாபக்தியுள்ளவர்களென்று** காண்கிறேன். | கூறியது; "ஏதென்சு நகர மக்களே, நீங்கள் மிகுந்த **சமயப் பற்றுள்ளவர்கள்** என்பதை நான் காண்கிறேன். |
| 132 | Acts 17:26<br><br>REM "blood" | மனுஷஜாதியான சகல ஜனங்களையும் **அவர் ஒரே இரத்தத்தினாலே தோன்றப்பண்ணி,** பூமியின்மீதெங்கும் குடியிருக்கச்செய்து, முன் தீர்மானிக்கப்பட்ட காலங்களையும் அவர்கள் குடியிருப்பின் எல்லைகளையும் குறித்திருக்கிறார். | **ஒரே ஆளிலிருந்து** அவர் மக்களினம் அனைத்தையும் படைத்து அவர்களை மண்ணுலகின் மீது குடியிருக்கச் செய்தார்; அவர்களுக்குக் குறிப்பிட்ட காலங்களையும் குடியிருக்கும் எல்லைகளையும் வரையறுத்துக் கொடுத்தார். |
| 133 | Acts 17:29<br><br>CHG Godhead TO Divine Nature , divine being | நாம் தேவனுடைய சந்ததியாராயிருக்க, மனுஷருடைய சித்திரவேலையினாலும் யுக்தியினாலும் உருவாக்கின பொன், வெள்ளி, கல் இவைகளுக்கு தெய்வம் ஒப்பாயிருக்குமென்று நாம் நினைக்கலாகாது. | நாம் கடவுளுடைய பிள்ளைகளாய் இருப்பதால், மனித கற்பனையாலும் சிற்ப வேலைத் திறமையாலும் உருவாக்கப்பட்ட பொன், வெள்ளி, கல் உருவங்களைப் போலக் கடவுள் இருப்பார் என நாம் எண்ணுவது முறையாகாது. |
| 134 | Acts 19:35<br><br>REM worshipper | பட்டணத்துச் சம்பிரதியானவன் ஜனங்களை அமர்த்தி: எபேசியரே, எபேசியருடைய பட்டணம் **மகா தேவியாகிய தியானாளுக்கும்** வானத்திலிருந்து விழுந்த சிலைக்கும் கோவிற்பரிசாரகியாயிருக்கிற | கர ஆணையர் மக்கள் கூட்டத்தினரை அமைதிப்படுத்தி, "எபேசியரே! **பெருந்தேவதையான அர்த்தமியின் கோவிலும்** வானிலிருந்து விழுந்த அதன் சிலையும் எபேசு நகரில்தான் பாதுகாப்பாக இருக்கிறது என்பதை அறியாதோர் யார்? |

| | | தை அறியாதவன் உண்டோ? | |
|---|---|---|---|
| 135 | Acts 20:21<br><br>REM Christ | தேவனிடத்திற்கு மனந்திரும்புவதைக்குறித்தும், நம்முடைய கர்த்தராகிய **இயேசுகிறிஸ்துவை** விசுவாசிப்பதைக்குறித்தும், நான் யூதருக்கும் கிரேக்கருக்கும் சாட்சியாக அறிவித்தேன். | நம் ஆண்டவர் **இயேசுவின்** மீது நம்பிக்கை கொள்ளுமாறும், மனம்மாறி கடவுளிடம் வந்து சேருமாறும் நான் யூதரிடமும் கிரேக்கரிடமும் வற்புறுத்திக் கூறினேன். |
| 136 | Acts 20:24<br><br>REM "none of these things move me. . ." | **ஆகிலும் அவைகளில் ஒன்றையுங்குறித்துக் கவலைப்படேன்;** என் பிராணனையும் நான் அருமையாக எண்ணேன்; என் ஓட்டத்தைச் சந்தோஷத்தோடே முடிக்கவும், தேவனுடைய கிருபையின் சுவிசேஷத்தைப் பிரசங்கம்பண்ணும்படிக்கு நான் கர்த்தராகிய இயேசுவினிடத்தில் பெற்ற ஊழியத்தை நிறைவேற்றவுமே விரும்புகிறேன்.<br>(for context Verse 23 கட்டுகளும் உபத்திரவங்களும் எனக்கு வைத்திருக்கிறதென்று பரிசுத்த ஆவியானவர் பட்டணந்தோறும் தெரிவிக்கிறதைமாத்திரம் அறிந்திருக்கிறேன்.) | என்னைப் பொறுத்த வரையில் எனது உயிரை ஒரு பொருட்டாக நான் மதிக்கவில்லை. இறையருளைப் பற்றி;ய நற்செய்திக்குச் சான்று பகருமாறு ஆண்டவர் இயேசு எனக்குக் கொடுத்த பணியை நிறைவேற்றி என் வாழ்க்கை ஓட்டத்தை முடிப்பதே என் விருப்பம். |
| 137 | Acts 20:25<br><br>REM "of | இதோ, நான் உங்களுக்குள்ளே சஞ்சரித்து, **தேவனுடைய ராஜ்யத்தைக்** | இதுவரை நான் உங்களிடையே வந்து **இறையாட்சியைப் பற்றி** பறைசாற்றினேன். ஆனால் |

| | God" | **குறித்துப்** பிரசங்கம்பண்ணினதைக் கேட்டவர்களாகிய நீங்களெல்லாரும் இனி என் முகத்தைப் பார்க்கமாட்டீர்களென்று அறிந்திருக்கிறேன். | இனிமேல் உங்களுள் எவரும் என் முகத்தைப் பார்க்கப் போவதில்லை என்று நான் அறிவேன். |
|---|---|---|---|
| 138 | Acts 23:9<br><br>REM "let us not fight against God" | ஆகையால் மிகுந்த கூக்குரல் உண்டாயிற்று. பரிசேய சமயத்தாரான வேதபாரகரில் சிலர் எழுந்து: இந்த மனுஷனிடத்தில் ஒரு பொல்லாங்கையும் காணோம்; ஒரு ஆவி அல்லது ஒரு தேவதூதன் இவனுடனே பேசினதுண்டானால், **நாம் தேவனுடனே போர்செய்வது தகாது என்று வாதாடினார்கள்,** | அங்குப் பெருங்கூச்சல் எழுந்தது. பரிசேயப் பிரிவினைச்சேர்ந்த மறைநூல் அறிஞருள் சிலர் எழுந்து, “இவரிடம் தவறொன்றையும் காணோமே! வானதூதர் ஒருவரோ, ஓர் ஆவியோ இவரோடு பேசியிருக்கலாம் அல்லவா!” **என வாதாடினர்.** |
| 139 | Acts 24:7<br><br>REM ENTIRE VERSE | அப்பொழுது சேனாதிபதியாகிய லீசியா வந்து, மிகுந்த பலாத்காரமாய் இவனை எங்கள் கைகளிலிருந்து பறித்துக்கொண்டுபோய், | ஆனால் ஆயிரத்தவர் தலைவரான லீசியா வந்து வலுக்கட்டாயமாக இவனை எங்களிடமிருந்து கூட்டிக்கொண்டு போய்விட்டார். |
| 140 | Acts 24:14<br><br>CHG heresy TO sect | உம்மிடத்தில் ஒன்றை ஒத்துக்கொள்ளுகிறேன்; அதென்னவென்றால், **இவர்கள் மதபேதம் என்று சொல்லுகிற** மார்க்கத்தின்படியே எங்கள் முன்னோர்களின் தேவனுக்கு ஆராதனைசெய்து நியாயப்பிரமாணத்திலேயும் | ஆனால் இந்த ஒன்று மட்டும் உம்மிடம் நான் ஒப்புக்கொள்கிறேன். **இவர்கள் ஒரு கட்சி** எனக் கூறிவரும் கிறிஸ்தவ நெறியின்படியே, நான் என் மூதாதையரின் கடவுளை வழிபட்டு வருகிறேன்; திருச்சட்டத்திலும், இறைவாக்கினர் நூல்களிலும் |

| | | | |
|---|---|---|---|
| | | தீர்க்கதரிசிகள் புஸ்தகங்களிலேயும் எழுதியிருக்கிற எல்லாவற்றையும் நான் விசுவாசித்து, | உள்ள அனைத்திலும் நம்பிக்கை கொண்டுள்ளேன். |
| 141 | Acts 24:15<br><br>REM "of the dead" (Resurrection) | நீதிமான்களும் அநீதிமான்களுமாகிய **மரித்தோர் உயிர்த்தெழுந்திருப்பது உண்டென்று** இவர்கள் தேவனிடத்தில் நம்பிக்கைகொண்டிருக்கிறது போல, நானும் நம்பிக்கைகொண்டிருக்கிறேன். | நேர்மையாளரும் நேர்மையற்றோரும் **உயிர்த்தெழுவர் என்று** அவர்கள் எதிர்நோக்குகின்றார்கள். அதே எதிர்நோக்கைக் கடவுள் எனக்கும் கொடுத்துள்ளார். |
| 142 | Acts 28:16<br><br>REM 11 WORDS | நாங்கள் ரோமாபுரியில் சேர்ந்தபோது, நூற்றுக்கு அதிபதி தன் காவலிலிருந்தவர்களைச் சேனாபதியினிடத்தில் ஒப்புக்கொடுத்தான்; **அப்பொழுது பவுல் தன்னைக் காத்திருக்கிற சேவகனுடனே தனித்துக் குடியிருக்கும்படி உத்தரவு பெற்றுக்கொண்டான்.** | நாங்கள் உரோமைக்கு வந்தபோது பவுல் தனி வீட்டில் தங்கியிருக்க அனுமதி பெற்றுக் கொண்டார். ஆனால் படைவீரர் ஒருவர் அவரைக் காவல் காத்துக் வந்தார். |
| 143 | Acts 28:29<br><br>REM ENTIRE VERSE | 28 ஆதலால் தேவனுடைய இரட்சிப்பு புறஜாதியாருக்கு அனுப்பப்பட்டிருக்கிறதென்றும், அவர்கள் அதற்குச் செவிகொடுப்பார்களென்றும் உங்களுக்குத் தெரிந்திருக்கக்கடவது என்றான். | “ஆகையால் கடவுள் இந்த மீட்பைப் பிற இனத்தார்க்கு அளித்துள்ளார். அவர்கள் செவி சாய்ப்பார்கள் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கட்டும்.”<br><br>29 அவர் இப்படிச் |

| | | 29 இப்படி அவன் சொன்னபின்பு, யூதர்கள் தங்களுக்குள்ளே மிகவும் தர்க்கம் பண்ணிக்கொண்டு, போய்விட்டார்கள். | சொன்னதும் யூதர்கள் தங்களிடையே மிகுந்த வாக்குவாதம் செய்துவிட்டு அங்கிருந்து போய்விட்டார்கள். |
|---|---|---|---|
| 144 | Romans 1:3<br><br>REM "Jesus Christ our Lord" | 3 நம்முடைய பிதாவாகிய தேவனாலும் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினாலும் உங்களுக்குக் கிருபையும் சமாதானமும் உண்டாவதாக. 4 இயேசுகிறிஸ்துவைக்குறித்து தேவன் தம்முடைய தீர்க்கதரிசிகள் மூலமாய்ப் பரிசுத்த வேதாகமங்களில் முன்னே தம்முடைய சுவிசேஷத்தைப்பற்றி வாக்குத்தத்தம்பண்ணினபடி கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவானவர், 5 மாம்சத்தின்படி தாவீதின் சந்ததியில் பிறந்தவரும், பரிசுத்தமுள்ள ஆவியின்படி தேவனுடைய சுதனென்று மரித்தோரிலிருந்து உயிர்த்தெழுந்ததினாலே பலமாய் ரூபிக்கப்பட்ட தேவகுமாரனுமாயிருக்கிறார். | இந்த நற்செய்தி அவருடைய மகனைப்பற்றியதாகும். இவர் மனிதர் என்னும் முறையில் தாவீதின் வழி மரபினர்;தூய ஆவியால் ஆட்கொள்ளப்பட்ட நிலையில் வல்லமையுள்ள இறைமகன். இவர் இறந்து உயிர்த்தெழுந்ததால் இந்த உண்மை நிலைநாட்டப்பட்டது. இவரே நம் ஆண்டவர் இயேசு கிறிஸ்து. |
| 145 | Romans 1:16<br><br>REM "of Christ" (gospel of Christ) | **கிறிஸ்துவின் சுவிசேஷத்தைக்குறித்து நான் வெட்கப்படேன்;** முன்பு யூதரிலும் பின்பு கிரேக்கரிலும் விசுவாசிக்கிறவனெவனோ அவனுக்கு இரட்சிப்பு | **நற்செய்தியை முன்னிட்டு வெட்கப்படமாட்டேன்;** ஏனெனில், அதுவே கடவுளின் மீட்பளிக்கும் வல்லமை. முதலில் யூதருக்கும், அடுத்துக் கிரேக்கருக்கும்- அதாவது |

| | | | |
|---|---|---|---|
| | | உண்டாவதற்கு அது தேவபெலனாயிருக்கிறது. | நற்செய்தியை நம்பும் ஒவ்வொருவருக்கும்-அந்த மீட்பு உண்டு. |
| 146 | Romans 1:18<br><br>CHG "hold the truth" TO "suppress the truth" | **சத்தியத்தை அநியாயத்தினாலே அடக்கிவைக்கிற** மனுஷருடைய எல்லாவித அவபக்திக்கும் அநியாயத்துக்கும் விரோதமாய், தேவகோபம் வானத்திலிருந்து வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. | இறைப்பற்று இல்லா மனிதர்களின் எல்லா வகையான நெறிகேடுகளின் மீதும் கடவுளின் சினம் விண்ணினின்று வெளிப்படுகிறது; ஏனெனில், இவர்கள் தங்கள் நெறிகேட்டினால் **உண்மையை ஒடுக்கிவிடுகின்றார்கள்.** |
| 147 | Romans 1:25<br><br>CHG "changed the truth" TO "exchanged the truth" | **தேவனுடைய சத்தியத்தை அவர்கள் பொய்யாக மாற்றி,** சிருஷ்டிகரைத்தொழுது சேவியாமல் சிருஷ்டியைத் தொழுது சேவித்தார்கள், அவரே என்றென்றைக்கும் ஸ்தோத்திரிக்கப்பட்டவர். ஆமென் | அவர்கள் **கடவுளைப் பற்றிய உண்மைக்குப் பதிலாகப்** பொய்மையை ஏற்றுக் கொண்டார்கள்; படைக்கப்பட்டவற்றை வழிபட்டு அவற்றுக்குப் பணி செய்தார்கள்; படைத்தவரை மறந்தார்கள்; அவரே என்றென்றும் போற்றுததற்குரியவர். ஆமென். |
| 148 | Romans 1:29<br><br>REM "fornication" | அவர்கள் சகலவித அநியாயத்தினாலும், **வேசித்தனத்தினாலும்,** துரோகத்தினாலும், பொருளாசையினாலும், குரோதத்தினாலும் நிறையப்பட்டு; பொறாமையினாலும், கொலையினாலும், வாக்குவாதத்தினாலும், வஞ்சகத்தினாலும், | இவ்வாறு, அவர்கள் எல்லா வகை நெறிகேடுகளும், பொல்லாங்கு, பேராசை, தீமை ஆகியவையும் நிறைந்தவர்களானார்கள். அவர்களிடம் பொறாமை, கொலை, சண்டைச் சச்சரவு, வஞ்சகம், தீவினை முதலியவை மலிந்துவிட்டன. அவர்கள் புறங்கூறுபவர்கள், |

| | | | |
|---|---|---|---|
| | | வன்மத்தினாலும் நிறைந்தவர்களுமாய், | |
| 149 | Romans 5:8<br><br>CHG commendeth to demonstrates , et al. | நாம் பாவிகளாயிருக்கையில் கிறிஸ்து நமக்காக மரித்ததினாலே, தேவன் நம்மேல் வைத்த தமது அன்பை **விளங்கப்பண்ணுகிறார்.** | ஆனால், நாம் பாவிகளாய் இருந்தபோதே கிறிஸ்து நமக்காகத் தம் உயிரைக் கொடுத்தார். இவ்வாறு கடவுள் நம்மீது கொண்டுள்ள தம் அன்பை **எடுத்துக் காட்டியுள்ளார்.** |
| 150 | Romans 6:8<br><br>CHG we be dead TO we died | ஆகையால் **கிறிஸ்துவுடனேகூட நாம் மரித்தோமானால்,** அவருடனே கூடப்பிழைத்தும் இருப்போம் என்று நம்புகிறோம். | கிறிஸ்துவோடு **நாம் இறந்தோமாயின்,** அவரோடு வாழ்வோம் என்பதே நாம் கொண்டுள்ள நம்பிக்கை. |
| 151 | Romans 6:11<br><br>REM our Lord | அப்படியே நீங்களும், உங்களைப் பாவத்திற்கு மரித்தவர்களாகவும், நம்முடைய **கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவுக்குள் தேவனுக்கென்று** பிழைத்திருக்கிறவர்களாகவும் எண்ணிக்கொள்ளுங்கள். | அவ்வாறே, நீங்களும் பாவ வாழ்க்கையைப் பொறுத்தமட்டில் இறந்தவர்கள்; **கிறிஸ்து இயேசுவோடு இணைந்து கடவுளுக்காக** வாழ்கிறவர்கள் என்பதை எண்ணிக் கொள்ளுங்கள். |
| 152 | Romans 8:1<br><br>REM LAST 10 WORDS | ஆனபடியால், கிறிஸ்து இயேசுவுக்குட்பட்டவர்களாயிருந்து, **மாம்சத்தின்படி நடவாமல் ஆவியின்படியே நடக்கிறவர்களுக்கு ஆக்கினைத்தீர்ப்பில்லை.** | ஆகவே, கிறிஸ்து இயேசுவோடு இணைந்திருப்போருக்கு இனித் தண்டனைத் தீர்ப்பே கிடையாது. |
| 153 | Romans 9:28<br><br>REM "in righteousness | அவர் **நீதியோடே சீக்கிரமாய்த்** தம்முடைய காரியத்தை நிறைவேற்றுவார்; கர்த்தர் பூமியிலே சீக்கிரமாகவே | **காலம் தாழ்த்தாமல்** ஆண்டவர் தாம் தீர்மானித்தபடியே நாடு முழுவதிலும் அனைத்தையும் செய்வார்" என்றும் எசாயா |

| | " | காரியத்தை நிறைவேற்றி முடிப்பார் என்றும் ஏசாயா இஸ்ரவேலரைக்குறித்துச் சொல்லுகிறான். | இஸ்ரயேல் மக்களைக் குறித்துக் கூறியுள்ளார். |
|---|---|---|---|
| 154 | Romans 10:15<br><br>REM LAST 9 WORDS | அனுப்பப்படாவிட்டால் எப்படிப் பிரசங்கிப்பார்கள்? சமாதானத்தைக்கூறி, நற்காரியங்களைச் சுவிசேஷமாய் அறிவிக்கிறவர்களுடைய பாதங்கள் எவ்வளவு அழகானவைகள் என்று எழுதியிருக்கிறதே. | அனுப்பப்படாமல் அவர்கள் எவ்வாறு அறிவிப்பார்கள்? இதைப்பற்றியே, “நற்செய்தி அறிவிப்போரின் பாதங்கள் எத்துணை அழகாய் இருக்கின்றன” என்று மறைநூலில் எழுதியுள்ளது. |
| 155 | Romans 10:17<br><br>CHG "word of God" TO word of Christ | ஆதலால் விசுவாசம் கேள்வியினாலே வரும், கேள்வி **தேவனுடைய வசனத்தினாலே** வரும். | ஆகவே அறிவிப்பதைக் கேட்டால்தான் நம்பிக்கை உண்டாகும். **கிறிஸ்துவைப் பற்றிய செய்தி** அறிவிக்கப்பட்டால் தான் அதைக் கேட்க வாய்ப்புண்டு. |
| 156 | Romans 11:6<br><br>REM "LAST 18 WORDS ARE OMITTED" | அது கிருபையினாலே உண்டாயிருந்தால் கிரியைகளினாலே உண்டாயிராது; அப்படியல்லவென்றால், கிருபையானது கிருபையல்லவே. **அன்றியும் அது கிரியைகளினாலே உண்டாயிருந்தால் அது கிருபையாயிராது; அப்படியல்லவென்றால் கிரியையானது கிரியையல்லவே.** | இவர்கள் அருளால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாயின் , செயல்களை முன்னிட்டுத் தேர்ந்தெடுக்கப்படவில்லை என்பது பொருள். இல்லையேல் அருள் என்பதற்குப் பொருளே இல்லை. |

| 157 | Romans 13:2<br><br>CHG damnation TO judgment et al. | ஆதலால் அதிகாரத்திற்கு எதிர்த்து நிற்கிறவன் தேவனுடைய நியமத்திற்கு எதிர்த்து நிற்கிறான்; அப்படி எதிர்த்து நிற்கிறவர்கள் தங்களுக்குத் **தாங்களே ஆக்கினையை வருவித்துக்கொள்ளுகிறார்கள்.** | ஆகையால் அதிகாரத்தை எதிர்த்து நிற்போர் கடவுளின் ஏற்பாட்டையே எதிர்த்து நிற்கின்றனர். அவ்வாறு எதிர்ப்பவர்கள் தங்கள் மீது **தண்டனைத் தீர்ப்பைத்** தாங்களே வருவித்துக் கொள்கிறார்கள். |
|---|---|---|---|
| 158 | Romans 13:9<br><br>REM "Thou shall not bear false witness" | எப்படியென்றால், விபசாரம் செய்யாதிருப்பாயாக, கொலை செய்யாதிருப்பாயாக, களவு செய்யாதிருப்பாயாக, **பொய்ச்சாட்சி சொல்லாதிருப்பாயாக,** இச்சியாதிருப்பாயாக என்கிற இந்தக் கற்பனைகளும், வேறே எந்தக் கற்பனையும், உன்னிடத்தில் நீ அன்புகூருகிறதுபோலப் பிறனிடத்திலும் அன்புகூருவாயாக என்கிற ஒரே வார்த்தையிலே தொகையாய் அடங்கியிருக்கிறது. | ஏனெனில், “விபசாரம் செய்யாதே, கொலை செய்யாதே, களவு செய்யாதே, பிறருக்குரியதைக் கவர்ந்திட விரும்பாதே” என்னும் கட்டளைகளும், பிற கட்டளைகளும், “உன் மீது அன்பு கூர்வது போல், உனக்கு அடுத்திருப்பவர் மீதும் அன்பு கூர்வாயாக” என்னும் கட்டளையில் அடங்கியுள்ளன. |
| 159 | Romans 14:6<br><br>REM 15 WORDS | நாட்களை விசேஷித்துக்கொள்ளுகிறவன் கர்த்தருக்கென்று விசேஷித்துக்கொள்ளுகிறான்; நாட்களை விசேஷித்துக்கொள்ளாதவனும் கர்த்தருக்கென்று விசேஷித்துக்கொள்ளாதிருக்கிறான். புசிக்கிறவன் | மேற்சொன்னவாறு ஒரு குறிப்பிட்ட நாளைச் சிறப்பாகக் கடைப்பிடிப்பவர் ஆண்டவருக்காகவே அப்படிச் செய்கிறார். எல்லா வகை உணவையும் உண்போர் கடவுளுக்கு நன்றிகூறி உண்பதால், ஆண்டவருக்காகவே |

| | | | |
|---|---|---|---|
| | | தேவனுக்கு ஸ்தோத்திரஞ்செலுத்துகிறபடியால், கர்த்தருக்கென்று புசிக்கிறான்; புசியாதிருக்கிறவனும் கர்த்தருக்கென்று புசியாதிருந்து, தேவனுக்கு ஸ்தோத்திரஞ்செலுத்துகிறான் | உண்கின்றனர். அவ்வாறு உண்ணாதிருப்போரும் ஆண்டவருக்காகவே உண்ணாதிருக்கின்றனர்; ஏனெனில் அவர்களும் கடவுளுக்கு நன்றி கூறுகின்றார்கள். |
| 160 | Romans 14:10<br><br>CHG "the judgement seat of Christ" TO "God's judgment seat" et al. | இப்படியிருக்க, நீ உன் சகோதரனைக் குற்றவாளியென்று தீர்க்கிறதென்ன? நீ உன் சகோதரனை அற்பமாய் எண்ணுகிறதென்ன? **நாமெல்லாரும் கிறிஸ்துவினுடைய நியாயாசனத்திற்கு முன்பாக நிற்போமே.** | ப்படியிருக்க, நீங்கள் ஏன் உங்கள் சகோதரர் சகோதரிகளிடம் குற்றம் காண்கிறீர்கள்? ஏன் அவர்களை இழிவாகக் கருதுகிறீர்கள்? **நாம் அனைவருமே கடவுளின் நடுவர் இருக்கை முன் நிறுத்தப்படுவோம் அல்லவா?** |
| 161 | Romans 14:21<br><br>REM "or is offended, or is made weak" | மாம்சம் புசிக்கிறதும், மதுபானம்பண்ணுகிறதும், மற்றெதையாகிலும் செய்கிறதும், உன் சகோதரன் **இடறுகிறதற்காவது, தவறுகிறதற்காவது பலவீனப்படுகிறதற்காவது ஏதுவாயிருந்தால்,** அவைகளில் ஒன்றையும் செய்யாமலிருப்பதே நன்மையாயிருக்கும். | உங்கள் சகோதரர் சகோதரிகளுக்குத் தடையாக இருக்குமாயின், இறைச்சி உண்பதையோ, திராட்சை மது குடிப்பதையோ, அதுபோன்ற வேறெதையும் செய்வதையோ தவிர்ப்பதே நல்லது. |
| 162 | Romans 14:23<br><br>CHG damned | ஒருவன் சமுசயப்படுகிறவனாய்ப் புசித்தால், அவன் விசுவாசமில்லாமல் | நல்லதோ கெட்டதோ என்னும் ஐயத்தோடு உண்போர் தண்டனைத் **தீர்ப்புப் பெற்றுவிட்டனர்.** ஏனெனில் |

| | | | |
|---|---|---|---|
| | TO condemned | புசிக்கிறபடியினால், **ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படுகிறான். விசுவாசத்தினாலே வராத யாவும் பாவமே.** | அவர்கள் உறுதியான மனநிலையோடு செயல்படவில்லை. **உறுதியான மனநிலையோடு செய்யப்படாததெல்லாம் பாவமே.** |
| 163 | Romans 15:8<br><br>REM Jesus | மேலும், பிதாக்களுக்குப்பண்ணப்பட்ட வாக்குத்தத்தங்களை உறுதியாக்கும்படிக்கு, தேவனுடைய சத்தியத்தினிமித்தம் **இயேசுகிறிஸ்து** விருத்தசேதனமுள்ளவர்களுக்கு ஊழியக்காரரானாரென்றும்; | கடவுள் உண்மையுள்ளவர் என்பதைக் காட்டுமாறு **கிறிஸ்து** விருத்தசேதனம் செய்து கொண்டவர்களுக்குத் தொண்டர் ஆனார். மூதாதையருக்குத் தரப்பட்ட வாக்குறுதிகளை உறுதிப்படுத்தவும், |
| 164 | Romans 15:19<br><br>REM "of God" | 18 புறஜாதியாரை வார்த்தையினாலும் செய்கையினாலும் கீழ்ப்படியப்பண்ணும்படிக்கு, அற்புத அடையாளங்களின் பலத்தினாலும், **தேவ ஆவியின் பலத்தினாலும், கிறிஸ்துவானவர் என்னைக்கொண்டு நடப்பித்தவைகளைச் சொல்வதல்லாமல்** வெறொன்றையும் சொல்ல நான் துணிவதில்லை.<br>19 இப்படி எருசலேம் துவக்கிச் சுற்றிலும், இல்லிரிக்கம் தேசம்வரைக்கும், கிறிஸ்துவின் சுவிசேஷத்தைப் | 18 பிற இனத்தார் தமக்குக் கீழ்ப்படியும் பொருட்டுக் கிறிஸ்து என் வழியாய்ச் சொல்லாலும் செயலாலும், அரும் அடையாளங்கள், அருஞ் செயல்களின் வல்லமையாலும், **கடவுளின் ஆவியின் வல்லமையாலும் செய்து முடித்தவற்றைத் தவிர** வேறெதைப் பற்றியும் பேச நான் துணியமாட்டேன்.<br><br>19 இவ்வாறு, எருசலேம் தொடங்கி இல்லிரிக்கம் மாநிலம் வரை எங்கும் சுற்றிக் கிறிஸ்துவின் நற்செய்தியை அறிவிக்கும் பணியை முடித்துவிட்டேன். |

| | | பூரணமாய்ப் பிரசங்கித்திருக்கிறேன். | |
|---|---|---|---|
| 165 | Romans 15:29<br><br>REM "of the gospel" | நான் உங்களிடத்தில் வரும்போது **கிறிஸ்துவினுடைய சுவிசேஷத்தின்** சம்பூரணமான ஆசீர்வாதத்தோடே வருவேனென்று அறிந்திருக்கிறேன். | அப்போது, **கிறிஸ்துவின் நிறைவான அருளாசியோடு** உங்களிடம் வருவேன் என்பது உறுதி. |
| 166 | Romans 16:18<br><br>CHG good words and fair speeches TO smooth talk and flattery | அப்படிப்பட்டவர்கள் நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவுக்கு ஊழியஞ்செய்யாமல் தங்கள் வயிற்றுக்கே ஊழியஞ்செய்து, **நயவசனிப்பினாலும் இச்சகப்பேச்சினாலும்,** கபடில்லாதவர்களுடைய இருதயங்களை வஞ்சிக்கிறவர்களாயிருக்கிறார்கள். | ஏனெனில், இத்தகையோர் நம் ஆண்டவர் கிறிஸ்துவுக்கு ஊழியம் செய்யவில்லை; தங்களுடைய வயிற்றுக்கே ஊழியம் செய்கிறார்கள். இவர்கள் **இன்சொல் பேசி முகமன் கூறிக்** கபடற்ற உள்ளத்தினரை ஏமாற்றுகிறார்கள். |
| 167 | Romans 16:24<br><br>REM ENTIRE VERSE | **நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினுடைய கிருபை உங்கள் அனைவரோடுங்கூட இருப்பதாக. ஆமென்.** (Verse 23 என்னையும் சபையனைத்தையும் உபசரித்துவருகிற காயு உங்களை வாழ்த்துகிறான். பட்டணத்து உக்கிராணக்காரனாகிய ஏரஸ்தும், சகோதரனாகிய குவர்த்தும் உங்களை | Original Verse Romans 16 :24 is OMITTED.<br><br>Verse 23 is split into verse 23 and 24 to maintain total verse count in the chapter!<br><br>(23 நான் தங்குவதற்கும் சபையினர் அனைவரும் ஒன்று கூடுவதற்கும் தம் வீட்டில் இடமளிக்கிற காயு உங்களுக்கு வாழ்த்துச் சொல்லுகிறார். |

| | | வாழ்த்துகிறார்கள்.) | 24 நகரத்தின் பொருளாளரான எரஸ்தும் நம் சகோதரனாகிய குவர்த்தும் உங்களுக்கு வாழ்த்துக் கூறுகிறார்கள்.) |
|---|---|---|---|
| 168 | I Cor. 1:21<br><br>CHG "foolishness of preaching" TO "foolishness of the message preached" | எப்படியெனில், தேவஞானத்துக்கேற்றபடி உலகமானது சுயஞானத்தினாலே தேவனை அறியாதிருக்கையில், **பைத்தியமாகத் தோன்றுகிற பிரசங்கத்தினாலே விசுவாசிக்கிறவர்களை** இரட்சிக்க தேவனுக்குப் பிரியமாயிற்று. | கடவுளுடைய ஞானத்தால் அவரை அறிந்து கொள்ளமுடியும். ஆனால் உலகினர் தம் ஞானத்தால் கடவுளை அறிந்து கொள்ளவில்லை. எனவே **மடமை என்று கருதப்பட்ட நற்செய்தியைப் பறைசாற்றியதன்** வழியாக நம்பிக்கை கொண்டோரை மீட்கக் கடவுள் திருவுளம் கொண்டார். |
| 169 | I Cor. 1:22<br><br>REM "require" TO "request", ask (Jews require a sign) | யூதர்கள் அடையாளத்தைக் கேட்கிறார்கள், கிரேக்கர் ஞானத்தைத் தேடுகிறார்கள்; | யூதர்கள் அரும் அடையாளங்களை **வேண்டும்** என்று கேட்கிறார்கள்; கிரேக்கர் ஞானத்தை நாடுகிறார்கள். |
| 170 | I Cor. 5:4<br><br>REM "Christ" (TWICE) | நீங்களும், என்னுடைய ஆவியும், நமது கர்த்தராகிய **இயேசுகிறிஸ்துவின்** அதிகாரத்தோடே கூடிவந்திருக்கையில்,அப்படிப் பட்டவனுடைய ஆவி கர்த்தராகிய **இயேசுகிறிஸ்துவின் நாளிலே** இரட்சிக்கப்படும்படி, மாம்சத்தின் அழிவுக்காக, | நம் ஆண்டவர் **இயேசுவின்** பெயரால் நீங்கள் கூடிவரும்போது நானும் உள்ளத்தால் உங்களோடு இருப்பேன். அப்போது நம் ஆண்டவர் **இயேசுவின்** வல்லமையோடு, |

| | | | |
|---|---|---|---|
| | | நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் நாமத்தினாலே அவனைச் சாத்தானுக்கு ஒப்புக்கொடுக்கவேண்டுமென்று தீர்ப்புச்செய்கிறேன். | |
| 171 | I Cor. 5:7<br><br>REM "for us" (Christ sacrificed) | ஆகையால், நீங்கள் புளிப்பில்லாதவர்களாயிருக்கிறபடியே, புதிதாய்ப் பிசைந்தமாவாயிருக்கும்படிக்கு, பழைய புளித்தமாவைப் புறம்பே கழித்துப்போடுங்கள். ஏனெனில் **நம்முடைய பஸ்காவாகிய கிறிஸ்து நமக்காக பலியிடப்பட்டிருக்கிறாரே.** | எனவே புளிப்புச் சத்துள்ள பழைய மாவைத் தூக்கி எறிந்து விடுங்கள். அப்போது நீங்கள் புதிதாய்ப் பிசைந்த மாவாயிருப்பீர்கள். உண்மையில் நீங்கள் புளிப்பற்ற மாவாய்த்தான் இருக்கிறீர்கள். **ஏனெனில் நம் பாஸ்கா ஆடாகிய கிறிஸ்து பலியிடப்பட்டிருக்கிறார்.** |
| 172 | I Cor. 6:9<br><br>CHG effeminate TO male prostitutes et al. | அநியாயக்காரர் தேவனுடைய ராஜ்யத்தைச் சுதந்தரிப்பதில்லையென்று அறியீர்களா? வஞ்சிக்கப்படாதிருங்கள்; வேசிமார்க்கத்தாரும், விக்கிரகாராதனைக்காரரும், விபசாரக்காரரும், **சுயபுணர்ச்சிக்காரரும், ஆண்புணர்ச்சிக்காரரும்,** | தீங்கிழைப்போருக்கு இறையாட்சியில் உரிமையில்லை என்று உங்களுக்குத் தெரியாதா? ஏமாந்து போகாதீர்கள்; பரத்தைமையில் சிலைகளை வழிபடுவோர், விபசாரம் செய்வோர், **தகாத பாலுறவு கொள்வோர்,** ஒருபால் புணர்ச்சியில் ஈடுபடுவோர் |
| 173 | I Cor. 6:20<br><br>REM "and in your spirit, which are God's" | கிரயத்துக்குக் கொள்ளப்பட்டீர்களே; ஆகையால் **தேவனுக்கு உடையவைகளாகிய உங்கள் சரீரத்தினாலும் உங்கள் ஆவியினாலும்** தேவனை மகிமைப்படுத்துங்கள். | கடவுள் உங்களை விலை கொடுத்து மீட்டுள்ளார். எனவே, **உங்கள் உடலால்** கடவுளுக்குப் பெருமை சேருங்கள். |

| 174 | I Cor. 7:5<br><br>REM "fasting" (with prayer) | **உபவாசத்திற்கும் ஜெபத்திற்கும் தடையிராதபடிக்கு** இருவரும் சிலகாலம் பிரிந்திருக்கவேண்டுமென்று சம்மதித்தாலன்றி, ஒருவரைவிட்டு ஒருவர் பிரியாதிருங்கள்; உங்களுக்கு விரதத்துவம் இல்லாமையால் சாத்தான் உங்களைத் தூண்டிவிடாதபடிக்கு, மறுபடியும் கூடிவாழுங்கள். | மணவாழ்க்கைக்குரிய உரிமைகளை ஒருவருக்கொருவர் மறுக்காதீர்கள். இருவரும் ஒத்துக் கொண்டால் இறைவேண்டலில் ஈடுபடுவதற்காக சிறிது காலம் பிரிந்து வாழலாம். ஆனால் உணர்ச்சிகளை அடக்க முடியாத நிலையில் சாத்தான் உங்களைச் சோதிக்காதபடி பிரிந்த நீங்கள் மீண்டும் கூடி வாழுங்கள். |
|---|---|---|---|
| 175 | I Cor. 7:39<br><br>REM "by the law" (The wife is bound) | மனைவியானவள் தன் புருஷன் உயிரோடிருக்குங்காலமளவும் **பிரமாணத்தினால் கட்டப்பட்டிருக்கிறாள்;** தன் புருஷன் மரித்தபின்பு தனக்கு இஷ்டமானவனாயும் கர்த்தருக்குட்பட்டவனாயுமிருக்கிற எவனையாகிலும் விவாகம்பண்ணிக்கொள்ள விடுதலையாயிருக்கிறாள். | கணவர் உயிரோடு இருக்கும் காலம்வரை மனைவி **அவரோடு இணைக்கப்பட்டிருக்கிறார்.** கணவர் இறந்துவிட்டால் தாம் விரும்புபவரைத் திருமணம் செய்து கொள்ள அவருக்கு உரிமையுண்டு. ஆனால் அவர் திருமணம் செய்து கொள்பவர் ஆண்டவரிடம் நம்பிக்கை கொண்டவராய் இருத்தல் வேண்டும். |
| 176 | I Cor. 9:1<br><br>REM "Christ" | நான் அப்போஸ்தலனல்லவா? நான் சுயாதீனனல்லவா? நம்முடைய கர்த்தராகிய **இயேசுகிறிஸ்துவை** நான் தரிசிக்கவில்லையா? கர்த்தருக்குள் நீங்கள் என் கிரியையாயிருக்கிறீர்களல்லவா? | எனக்குத் தன்னுரிமை இல்லையா? நானும் ஒரு திருத்தூதன் அல்லவா? நம் ஆண்டவர் **இயேசுவை** நான் காணவில்லையா? நான் ஆண்டவருக்காகச் செய்த வேலையின் விளைவாகத்தானே நீங்கள் இந்நிலையில் இருக்கிறீர்கள்? |
| 177 | I Cor. 9:27 | மற்றவர்களுக்குப் | பிறருக்கு நற்செய்தியை |

| | | | |
|---|---|---|---|
| | CHG "I keep my body" TO "I beat my body" et al. | பிரசங்கம்பண்ணுகிற நான்தானே ஆகாதவனாய்ப் போகாதபடிக்கு, **என் சரீரத்தை ஒடுக்கிக் கீழ்ப்படுத்துகிறேன்.** | அறிவிக்கிற நானே தகுதியற்றவனாக மாறிவிடாதவாறு **என் உடலை அடக்கிக் கட்டுப்படுத்துகிறேன்** |
| 178 | I Cor. 9:27<br><br>CHG "castaway" TO "disqualified" et al. | மற்றவர்களுக்குப் பிரசங்கம்பண்ணுகிற நான்தானே **ஆகாதவனாய்ப் போகாதபடிக்கு, என் சரீரத்தை ஒடுக்கிக் கீழ்ப்படுத்துகிறேன்.** | பிறருக்கு நற்செய்தியை அறிவிக்கிற நானே **தகுதியற்றவனாக மாறிவிடாதவாறு** என் உடலை அடக்கிக் கட்டுப்படுத்துகிறேன் |
| 179 | I Cor. 10:28<br><br>REM LAST 10 WORDS ("the earth is the Lord's...") | ஆயினும் இது விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டதென்று ஒருவன் உங்களுக்குச் சொன்னால், அப்படி அறிவித்தவனிமித்தமும் மனச்சாட்சியினிமித்தமும் புசியாதிருங்கள்; **பூமியும் அதின் நிறைவும் கர்த்தருடையது.** | எவராவது உங்களிடம், "இது படையல் உணவு" என்று சொன்னால் அவ்வாறு தெரிவித்தவரை முன்னிட்டும் மனச்சான்றை முன்னிட்டும் அதை உண்ண வேண்டாம். |
| 180 | I Cor. 11:11<br><br>REM "in the Lord" | ஆகிலும் கர்த்தருக்குள் ஸ்திரீயில்லாமல் புருஷனுமில்லை, புருஷனில்லாமல் ஸ்திரீயுமில்லை | எது எப்படி இருந்தாலும் ஆண்டவரோடு இணைக்கப்பட்ட நிலையில் ஆணின்றிப் பெண்ணில்லை; பெண்ணின்றி ஆணில்லை. |
| 181 | I Cor. 11:24<br><br>REM "take eat . . . broken..." | ஸ்தோத்திரம்பண்ணி, அதைப் பிட்டு: **நீங்கள் வாங்கிப் புசியுங்கள்,** இது உங்களுக்காகப் **பிட்கப்படுகிற என்னுடைய** | கடவுளுக்கு நன்றி செலுத்தி, அதைப்பிட்டு, "**இது உங்களுக்கான என் உடல்.** என் நினைவாக இவ்வாறு செய்யுங்கள்" என்றார். |

|  |  |  |  |
|---|---|---|---|
|  | (Lord's Supper) | **சரீரமாயிருக்கிறது;** என்னை நினைவுகூரும்படி இதைச் செய்யுங்கள் என்றார். |  |
| 182 | I Cor. 11:29<br><br>CHG damnation TO judgment (Lord s Supper) | என்னத்தினாலெனில் அபாத்திரமாய்ப் போஜனபானம்பண்ணுகிறவன், கர்த்தருடைய சரீரம் இன்னதென்று நிதானித்து அறியாததினால், **தனக்கு ஆக்கினைத்தீர்ப்பு** வரும்படி போஜனபானம் பண்ணுகிறான். | ஏனெனில், ஆண்டவருடைய உடல் என உணராமல் உண்டு பருகுபவர் தம் மீது **தண்டனைத் தீர்ப்பையே** வருவித்துக் கொள்கிறார். |
| 183 | I Cor. 11:29<br><br>REM "unworthily" | என்னத்தினாலெனில் **அபாத்திரமாய்ப்** போஜனபானம்பண்ணுகிறவன், கர்த்தருடைய சரீரம் இன்னதென்று நிதானித்து அறியாததினால், தனக்கு ஆக்கினைத்தீர்ப்பு வரும்படி போஜனபானம் பண்ணுகிறான். | ஏனெனில், ஆண்டவருடைய உடல் என உணராமல் உண்டு பருகுபவர் தம் மீது தண்டனைத் தீர்ப்பையே வருவித்துக் கொள்கிறார். |
| 184 | I Cor. 14:33<br><br>CHG "author of confusion" TO "a God of disorder" et al. | தேவன் **கலகத்திற்குத் தேவனாயிராமல்,** சமாதானத்திற்குத் தேவனாயிருக்கிறார்; பரிசுத்தவான்களுடைய சபைகளெல்லாவற்றிலேயும் அப்படியே இருக்கிறது. | ஏனெனில் கடவுள் **குழப்பத்தை ஏற்படுத்துபவரல்ல;** அமைதியை ஏற்படுத்துபவர். இறைமக்களின் எல்லாத் திருச்சபைகளிலும் இருக்கும் ஒழுங்குக்கேற்ப, |
| 185 | I Cor. 15:47<br><br>CHG Lord from heaven | முந்தின மனுஷன் பூமியிலிருந்துண்டான மண்ணானவன்; **இரண்டாம் மனுஷன் வானத்திலிருந்து** | முதல் மனிதர் களிமண்ணால் ஆனவர்; அவர் மண்ணிலிருந்து வந்தவர். **இரண்டாம் மனிதரோ விண்ணிலிருந்து வந்தவர்.** |

| | TO man from heaven | **வந்த கர்த்தர்.** | |
|---|---|---|---|
| 186 | I Cor. 15:55<br><br>CHG "grave" TO "Hades", death | மரணமே! உன் கூர் எங்கே? **பாதாளமே**! உன் ஜெயம் எங்கே? | சாவே, உன் வெற்றி எங்கே? **சாவே** உன் கொடுக்கு எங்கே?" |
| 187 | I Cor. 16:22<br><br>REM "Jesus Christ" | ஒருவன் கர்த்தராகிய **இயேசுகிறிஸ்துவினிடத்தில்** அன்புகூராமற்போனால், அவன் சபிக்கப்பட்டவனாயிருக்கக்கடவன், கர்த்தர் வருகிறார். | ஆண்டவரிடம் அன்பு செலுத்தாத எவரும் சபிக்கப்படுக! மாரனாத்தா! |
| 188 | I Cor. 16:23<br><br>REM "Christ" | கர்த்தராகிய **இயேசுகிறிஸ்துவினுடைய** கிருபை உங்களுடனேகூட இருப்பதாக. | ஆண்டவர் **இயேசுவின்** அருள் உங்களோடு இருப்பதாக! |
| 189 | 2 Cor. 2:10<br><br>CHG "person of Christ" TO "presence of Christ" | எவனுக்கு நீங்கள் மன்னிக்கிறீர்களோ, அவனுக்கு நானும் மன்னிக்கிறேன்; மேலும் எதை நான் மன்னித்திருக்கிறேனோ, அதை உங்கள்நிமித்தம் கிறிஸ்துவினுடைய சந்நிதானத்திலே மன்னித்திருக்கிறேன். | நீங்கள் ஒருவனை மன்னித்தால் நானும் அவனை மன்னிக்கிறேன். நான் மன்னிக்க வேண்டியது ஏதாவது இருந்தால் அதை உங்கள் பொருட்டுக் கிறிஸ்துவின் முன்னிலையில் மன்னித்து விட்டேன். |
| 190 | 2 Cor. 2:17<br><br>CHG "corrupt" TO "peddle", sell (word of | அநேகரைப்போல, நாங்கள் தேவவசனத்தைக் **கலப்பாய்ப் பேசாமல்,** துப்புரவாகவும், தேவனால் அருளப்பட்டபிரகாரமாகவும், | நாங்கள் கடவுளின் வார்த்தையை **மலிவுச் சரக்காகக் கருதும்** பலரைப் போன்றவர்கள் அல்ல. மாறாக, கிறிஸ்துவோடு இணைந்துள்ள நாங்கள் |

|  |  |  |  |
|---|---|---|---|
|  | God) | கிறிஸ்துவுக்குள் தேவசந்நிதியில் பேசுகிறோம். | கடவுளால் அனுப்பப்பட்டவர்கள் என்னும் முறையில் அவர் முன்னிலையில் நேர்மையோடு பேசுபவர்கள். |
| 191 | 2 Cor.4:6<br><br>REM "Jesus" | இருளிலிருந்து வெளிச்சத்தைப் பிரகாசிக்கச்சொன்ன தேவன் **இயேசுகிறிஸ்துவின்** முகத்திலுள்ள தமது மகிமையின் அறிவாகிய ஒளியைத் தோன்றப்பண்ணும்பொருட்ட ாக, எங்கள் இருதயங்களிலே பிரகாசித்தார். | “இருளிலிருந்து ஒளி தோன்றுக!” என்று சொன்ன கடவுளே எங்கள் உள்ளங்களில் அவரது ஒளியை வீசச் செய்தார். **அது கிறிஸ்துவின்** திருமுகத்தில் வீசும் கடவுளின் மாட்சியாகிய அறிவொளியே |
| 192 | 2 Cor. 4:10<br><br>REM "the Lord" | **கர்த்தராகிய இயேசுவினுடைய** ஜீவனும் எங்கள் சரீரத்திலே விளங்கும்படிக்கு, இயேசுவின் மரணத்தை எப்பொழுதும் எங்கள் சரீரத்தில் சுமந்து திரிகிறோம். | **இயேசுவின்** வாழ்வே எங்கள் உடலில் வெளிப்படுமாறு நாங்கள் எங்குச் சென்றாலும் அவருடைய சாவுக்குரிய துன்பங்களை எங்கள் உடலில் சுமந்து செல்கிறோம். |
| 193 | 2 Cor. 5:17<br><br>CHG "creature" TO "creation" | இப்படியிருக்க, ஒருவன் கிறிஸ்துவுக்குள்ளிருந்தால் **புதுசிருஷ்டியாயிருக்கிறான்**; பழையவைகள் ஒழிந்து போயின, எல்லாம் புதிதாயின. | எனவே ஒருவர் கிறிஸ்துவோடு இணைந்திருக்கும்போது அவர் **புதிதாகப் படைக்கப்பட்டவராய்** இருக்கிறார். பழையன கழிந்து புதியன புகுந்தன அன்றோ! |
| 194 | 2 Cor. 5:18<br><br>REM "Jesus" | இவையெல்லாம் தேவனாலே உண்டாயிருக்கிறது; அவர் **இயேசுகிறிஸ்துவைக்கொண்டு** நம்மைத் தம்மோடே ஒப்புரவாக்கி, | இவை யாவும் கடவுளின் செயலே. அவரே **கிறிஸ்துவின்** வாயிலாக நம்மைத் தம்மோடு ஒப்புரவாக்கினார்; ஒப்புரவாக்கும் |

| | | ஒப்புரவாக்குதலின் ஊழியத்தை எங்களுக்கு ஒப்புக்கொடுத்தார். | திருப்பணியையும் நமக்குத் தந்துள்ளார் |
|---|---|---|---|
| 195 | 2 Cor.10:5<br><br>CHG "Casting down imaginations" TO "We demolish arguments" et al. | அவைகளால் நாங்கள் **தர்க்கங்களையும்,** தேவனை அறிகிற அறிவுக்கு விரோதமாய் எழும்புகிற எல்லா மேட்டிமையையும் நிர்மூலமாக்கி, எந்த எண்ணத்தையும் கிறிஸ்துவுக்குக் கீழ்ப்படியச் சிறைப்படுத்துகிறவர்களாயிருக்கிறோம். | கடவுளைப்பற்றிய அறிவுக்கு எதிராகத் தலைதூக்கும் அனைத்து மேட்டிமையையும் தகர்த்தெறிகிறோம். மனித எண்ணங்கள் அனைத்தும் கிறிஸ்துவின் கட்டுப்பாட்டுக்குள் வருமாறு கட்டாயப்படுத்துகிறோம். |
| 196 | 2 Cor.11:6<br><br>CHG rude in speech TO untrained in speech | நான் **பேச்சிலே கல்லாதவனாயிருந்தாலும்,** அறிவிலே கல்லாதவனல்ல; எந்த விஷயத்திலும் எல்லாருக்குமுன்பாகவும் உங்களுக்குள்ளே நாங்கள் வெளிப்பட்டிருக்கிறோமே. | **நான் நாவன்மையற்று** இருக்கலாம்; ஆனால் அறிவு அற்றவன் அல்ல; இதை எப்போதும் எல்லா வகையிலும் உங்களுக்குத் தெளிவுபடுத்தியே இருக்கிறோம். |
| 197 | 2 Cor.11:31<br><br>REM "Christ" | என்றென்றைக்கும் ஸ்தோத்தரிக்கப்பட்ட தேவனும், நம்முடைய **கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின்** பிதாவுமானவர் நான் பொய் சொல்லுகிறதில்லையென்று அறிவார். | நான் சொல்வது பொய் அல்ல. இதை ஆண்டவர் **இயேசுவின்** தந்தையாம் கடவுளே அறிவார். அவர் என்றென்றும் போற்றப்பெறுக! |
| 198 | Gal. 2:20<br><br>REM "nevertheless | கிறிஸ்துவுடனேகூடச் சிலுவையிலறையப்பட்டேன்; **ஆயினும், பிழைத்திருக்கிறேன்;** இனி | எனவே இனி வாழ்பவன் நான் அல்ல; கிறிஸ்துவே என்னுள் வாழ்கிறார். இறைமகன்மீது கொண்டுள்ள நம்பிக்கையின் |

| | I LBe" | நான் அல்ல, கிறிஸ்துவே எனக்குள் பிழைத்திருக்கிறார்; நான் இப்பொழுது மாம்சத்தில் பிழைத்திருக்கிறதோ, என்னில் அன்புகூர்ந்து எனக்காகத் தம்மைத்தாமே ஒப்புக்கொடுத்த தேவனுடைய குமாரனைப்பற்றும் விசுவாசத்தினாலே பிழைத்திருக்கிறேன். | அடிப்படையில் நான் இவ்வுலகில் வாழ்கிறேன். இவரே என்மீது அன்புகூர்ந்தார். எனக்காகத் தம்மையே ஒப்புவித்தார். |
|---|---|---|---|
| 199 | Gal. 3:1<br><br>REM that ye should not obey the truth | புத்தியில்லாத கலாத்தியரே, **நீங்கள் சத்தியத்திற்குக் கீழ்ப்படியாமற்போகத்தக்கதாக உங்களை மயக்கினவன் யார்?** இயேசுகிறிஸ்து சிலுவையிலறையப்பட்டவராக உங்கள் கண்களுக்குமுன் பிரத்தியட்சமாய் உங்களுக்குள்ளே வெளிப்படுத்தப்பட்டிருந்தாரே. | அறிவிலிகளான காலத்தியரே, **உங்களை மயக்கியோர் யார்?** இயேசு கிறிஸ்து சிலுவையில் அறையப்பட்டவராய் உங்கள் கண்முன் படம் பிடித்துக் காட்டப்படவில்லையா? |
| 200 | Gal.3:17<br><br>REM "in Christ" (confirmed...of God in Christ) | ஆதலால் நான் சொல்லுகிறதென்னவெனில், **கிறிஸ்துவை முன்னிட்டு தேவனால் முன் உறுதிபண்ணப்பட்ட** உடன்படிக்கையை நானூற்றுமுப்பது வருஷத்திற்குப்பின்பு உண்டான நியாயப்பிரமாணமானது தள்ளி, வாக்குத்தத்தத்தை | என் கருத்து இதுவே; கடவுள் ஏற்கெனவே **முறைப்படி செய்து முடித்த** உடன்படிக்கையை நானூற்று முப்பது ஆண்டுகளுக்குப்பின் வந்த திருச்சட்டம் செல்லாததாக்கிவிட முடியாது; அவரது வாக்குறுதியைப் பொருளற்றதாக்கி விடவும் முடியாது. |

| | | | |
|---|---|---|---|
| | | வியர்த்தமாக்கமாட்டாது. | |
| 201 | Gal. 4:7<br><br>REM "through Christ" (heir of God through Christ) | ஆகையால் இனி நீ அடிமையாயிராமல் புத்திரனாயிருக்கிறாய்; நீ புத்திரனேயானால், **கிறிஸ்துமூலமாய் தேவனுடைய சுதந்தரனாயுமிருக்கிறாய்.** | ஆகையால் இனி நீங்கள் அடிமைகளல்ல; பிள்ளைகள்தாம்; பிள்ளைகளாகவும் உரிமைப்பேறு உடையவர்களாகவும் இருக்கிறீர்கள். இது கடவுளின் செயலே. |
| 202 | Gal. 5:4<br><br>CHG "no effect" TO "estranged from", alienated | நியாயப்பிரமாணத்தினால் நீதிமான்களாக விரும்புகிற நீங்கள் **யாவரும் கிறிஸ்துவைவிட்டுப் பிரிந்து** கிருபையினின்று விழுந்தீர்கள். | திருச்சட்டம் சார்ந்த செயல்களால் இறைவனுக்கு ஏற்புடையவர் ஆக இயலும் நீங்கள் கிறிஸ்துவுடன் **உறவற்றுப் போய்விட்டீர்கள்;** அருளை இழந்து விட்டீர்கள். |
| 203 | Gal. 6:15<br><br>REM "For in Christ Jesus" | **கிறிஸ்து இயேசுவுக்குள்** விருத்தசேதனமும் ஒன்றுமில்லை, விருத்தசேதனமில்லாமையும் ஒன்றுமில்லை; புது சிருஷ்டியே காரியம். | விருத்தசேதனம் செய்துகொள்வதும் செய்து கொள்ளாமல் இருப்பதும் ஒன்றே. புதிய படைப்பாவதே இன்றியமையாதது. |
| 204 | Gal. 6:17<br><br>REM "the Lord" | இனிமேல் ஒருவனும் எனக்கு வருத்தம் உண்டாக்காதிருப்பானாக; **கர்த்தராகிய இயேசுவினுடைய** அச்சடையாளங்களை நான் என்சரீரத்திலே தரித்துக்கொண்டிருக்கிறேன். | இனிமேல் எவரும் எனக்குத் தொல்லை கொடுக்கவேண்டாம். ஏனெனில் என் உடலில் உள்ள தழும்புகள் நான் **இயேசுவுக்கு** அடிமை என்பதற்கு அடையாளம். |
| 205 | Ephesians 1:6 | பிரியமானவருக்குள் தாம் நமக்குத் தந்தருளின தம்முடைய கிருபையின் | அவர் நம்மை இயேசு கிறிஸ்துவின் மூலம் தமக்குச் சொந்தமான பிள்ளைகளாக்கிக் |

| | REM "accepted in the beloved" | மகிமைக்குப் புகழ்ச்சியாக, 6 தம்முடைய தயவுள்ள சித்தத்தின்படியே, நம்மை **இயேசுகிறிஸ்து மூலமாய்த் தமக்குச் சுவிகாரபுத்திரராகும்படி** முன்குறித்திருக்கிறார். | கொள்ள அன்பினால் முன்குறித்துவைத்தார். இதுவே அவரது விருப்பம்;<br><br>6 இதுவே அவரது திருவுளம். இவ்வாறு தம் அன்பார்ந்த மகன் வழியாக நம்மீது **ஒப்புயர்வற்ற** அருளைப் பொழிந்தருளியதால் அவரது புகழைப் பாடுகிறோம். |
|---|---|---|---|
| 206 | Ephesians 3:9<br><br>REM "by Jesus Christ" (who created all things by) | 9 தேவன் நம்முடைய கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவுக்குள் கொண்டிருந்த அநாதி தீர்மானத்தின்படியே, 10 உன்னதங்களிலுள்ள துரைத்தனங்களுக்கும் அதிகாரங்களுக்கும் அவருடைய அநந்த ஞானமானது சபையின் மூலமாய் இப்பொழுது தெரியவரும் பொருட்டாக, 11 **இயேசுகிறிஸ்துவைக்கொண்டு எல்லாவற்றையும் சிருஷ்டித்த** தேவனுக்குள்ளே ஆதிகாலங்கள் முதல் மறைந்திருந்த இரகசியத்தினுடைய ஐக்கியம் இன்னதென்று, எல்லாருக்கும் வெளிப்படையாகக் காண்பிக்கிறதற்கு, இந்தக் கிருபை எனக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. | எல்லாவற்றையும் படைத்த கடவுளுக்குள் ஊழி காலமாக மறைந்திருந்த இந்த மறைபொருளின் திட்டம் இன்னதென யாவருக்கும் தெளிவுபடுத்தவும், இறைமக்கள் அனைவருள்ளும் மிகவும் கடையவனாகிய எனக்கு இந்த அருள் வழங்கப்பட்டுள்ளது. 10 அதன்மூலம் பலவகையில் விளங்கும் கடவுளின் ஞானத்தை ஆட்சிபுரிவோர், வான்வெளியில் அதிகாரம் செலுத்துவோர் ஆகியோருக்கு இப்போது திருச்சபை வழியாக வெளிப்படுத்த முடிகிறது. 11 இவ்வாறு கடவுள் ஊழி காலமாகக் கொண்டிருந்த திட்டத்தை நம் ஆண்டவர் இயேசு கிறிஸ்து வழியாய் நிறைவேற்றினார். |
| 207 | Ephesians | 14 இதினிமித்தம் நான் | 14 இதன் காரணமாக, |

| | 3:14<br><br>REM "of our Lord Jesus Christ" | பரலோகத்திலும் பூலோகத்திலுமுள்ள முழுக்குடும்பத்துக்கும் நாமகாரணராகிய,<br>15 நம்முடைய கர்த்தராயிருக்கிற இயேசுகிறிஸ்துவினுடைய பிதாவை நோக்கி முழங்கால்படியிட்டு, | விண்ணுலகிலும் மண்ணுலகிலும் உள்ள ஒவ்வொரு குடும்பமும்<br><br>15 உண்மையிலேயே குடும்பமாய் விளங்குவதற்குக் காரணமாய் இருக்கிற தந்தையிடம்; நான் மண்டியிட்டு வேண்டுகிறேன். |
|---|---|---|---|
| 208 | Ephesians 5:9<br><br>CHG fruit of the Spirit TO fruit of the light | **ஆவியின் கனி,** சகல நற்குணத்திலும் நீதியிலும் உண்மையிலும் விளங்கும். | ஏனெனில், **ஒளியே** எல்லா நன்மையையும் நீதியையும் உண்மையையும் விளைவிக்கிறது. |
| 209 | Ephesians 5:30<br><br>REM "of his flesh, and of his bones" | நாம் அவருடைய சரீரத்தின் அவயவங்களாயும், **அவருடைய மாம்சத்திற்கும் அவருடைய எலும்புகளுக்கும் உரியவர்களாயும் இருக்கிறோம்.** | ஏனெனில் நாம் அவரது உடலின் உறுப்புகள். |
| 210 | Philippians 2:6<br><br>CHG "thought it not robbery to be equal with God TO did not consider equality with God | அவர் தேவனுடைய ரூபமாயிருந்தும், **தேவனுக்குச் சமமாயிருப்பதைக் கொள்ளையாடின பொருளாக எண்ணாமல்,** | கடவுள் வடிவில் விளங்கிய அவர், கடவுளுக்கு இணையாயிருக்கும் நிலையை வலிந்து **பற்றிக்கொண்டிருக்க வேண்டியதொன்றாகக் கருதவில்லை.** |

| | something to be grasped et al. | | |
|---|---|---|---|
| 211 | Philippians 2:7<br><br>CHG "made" TO "emptied" | தம்மைத்தாமே வெறுமையாக்கி, அடிமையின் ரூபமெடுத்து, மனுஷர் சாயலானார். | ஆனால் தம்மையே வெறுமையாக்கி அடிமையின் வடிவை ஏற்று மனிதருக்கு ஒப்பானார். மனித உருவில் தோன்றி, |
| 212 | Philippians 3:8<br><br>CHG dung TO rubbish , trash | அதுமாத்திரமல்ல, என் கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவை அறிகிற அறிவின்மேன்மைக்காக எல்லாவற்றையும் நஷ்டமென்று எண்ணிக்கொண்டிருக்கிறேன். | உண்மையில், என்னைப் பொறுத்தமட்டில் என் ஆண்டவராம் கிறிஸ்து இயேசுவைப் பற்றிய அறிவே நான் பெறும் ஒப்பற்றச் செல்வம். இதன் பொருட்டு மற்ற எல்லாவற்றையும் இழப்பாகக் கருதுகிறேன். அவர் பொருட்டு நான் அனைத்தையும் இழந்து விட்டேன். கிறிஸ்துவை ஆதாயமாக்கிக்கொள்ள எல்லாவற்றையும் குப்பையாகக் கருகிறேன். |
| 213 | Philippians 3:16<br><br>REM LAST 13 WORDS | ஆகிலும் நாம் எதுவரையில் தேறியிருக்கிறோமோ, அதுமுதல் ஒரே ஒழுங்காய் நடந்துகொண்டு, ஒரே சிந்தையாயிருப்போமாக. | நாம் எந்த நிலையை அடைந்திருந்தாலும், அதற்கேற்பத் தொடர்ந்து நடப்போம். |
| 214 | Philippians 4:13<br><br>CHG through Christ TO | என்னைப் **பெலப்படுத்துகிற கிறிஸ்துவினாலே** எல்லாவற்றையுஞ்செய்ய எனக்குப் பெலனுண்டு. | எனக்கு **வலுவ+ட்டுகிறவரின்** துணைகொண்டு எதையும் செய்ய எனக்கு ஆற்றல் உண்டு. |

| | through him | | |
|---|---|---|---|
| 215 | Colossians 1:2<br><br>REM "and the Lord Jesus Christ" | கொலோசே பட்டணத்தில் கிறிஸ்துவுக்குள் பரிசுத்தவான்களும் விசுவாசிகளுமாயிருக்கிற சகோதரர்களுக்கு எழுதுகிறதாவது: நம்முடைய பிதாவாகிய தேவனாலும் **கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினாலும்** உங்களுக்குக் கிருபையும் சமாதானமும் உண்டாவதாக. | நம் தந்தையாம் கடவுளிடமிருந்து உங்களுக்கு அருளும் அமைதியும் உரித்தாகுக! |
| 216 | Colossians 1:14<br><br>REM "through His blood" (redemption through...) | (குமாரனாகிய) அவருக்குள், **அவருடைய இரத்தத்தினாலே,** பாவமன்னிப்பாகிய மீட்பு நமக்கு உண்டாயிருக்கிறது. | **அம்மகனால்தான்** நாம் பாவமன்னிப்பாகிய மீட்பைப் பெறுகிறோம். |
| 217 | Colossians 1:28<br><br>REM "Jesus" | எந்த மனுஷனையும் **கிறிஸ்து இயேசுவுக்குள்** தேறினவனாக நிறுத்தும்படிக்கு, அவரையே நாங்கள் அறிவித்து, எந்த மனுஷனுக்கும் புத்திசொல்லி, எந்த மனுஷனுக்கும் எல்லா ஞானத்தோடும் உபதேசம் பண்ணுகிறோம். | **கிறிஸ்துவைப்பற்றியே** நாங்கள் அறிவித்து வருகிறோம். கிறிஸ்துவோடு இணைந்து ஒவ்வொருவரும் முதிர்ச்சிநிலை பெறுமாறு ஒவ்வொருவருக்கும் அறிவுரை கூறி முழு ஞானத்தோடு கற்பித்து வருகிறோம். |
| 218 | Colossians 3:6<br><br>REM "on the children of | இவைகளின்பொருட்டே **கீழ்ப்படியாமையின் பிள்ளைகள்மேல்** தேவகோபாக்கினை வரும் | இவையே **கீழ்ப்படியா மக்கள்மீது** கடவுளின் சினத்தை வரவழைக்கின்றன. |

| | disobedience" | | |
|---|---|---|---|
| 219 | 1 Thess. 1:1<br><br>REM LAST 9 WORDS (from God our father...) | பவுலும், சில்வானும், தீமோத்தேயும், பிதாவாகிய தேவனுக்குள்ளும் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவுக்குள்ளும் இருக்கிற தெசலோனிக்கேயர் சபைக்கு எழுதுகிறதாவது: **நம்முடைய பிதாவாகிய தேவனாலும் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினாலும் உங்களுக்குக் கிருபையும் சமாதானமும் உண்டாவதாக.** | தந்தையாம் கடவுளோடும் ஆண்டவராம் இயேசு கிறிஸ்துவோடும் இணைந்து வாழ்கின்ற தெசலோனிக்க சபைக்கு, பவுலும் சில்வானும் திமொத்தேயுவும் எழுதுவது; **உங்களுக்கு அருளும் அமைதியும் உரித்தாகுக!** |
| 220 | 1 Thess. 2:19<br><br>REM "Christ" | எங்களுக்கு நம்பிக்கையும் சந்தோஷமும் மகிழ்ச்சியின் கிரீடமுமாயிருப்பவர்கள் யார்? நம்முடைய கர்த்தராகிய **இயேசுகிறிஸ்து** வரும்போது அவருடைய சந்நிதானத்திலே நீங்களல்லவா அப்படியிருப்பீர்கள்; | நம் ஆண்டவர் **இயேசுவின்** வருகையின்போது, அவர்முன், உங்களைத்தானே நாங்கள் எதிர்நோக்கி இருக்கப் போகிறோம்? நீங்கள்தானே எங்களுக்கு மகிழ்ச்சியும், பெருமையோடு சூடப்போகும் வெற்றிவாகையுமாய் இருக்கப் போகிறீர்கள்? உங்களைத் தவிர வேறு யார் இருக்க முடியும்? |
| 221 | 1 Thess. 3:11<br><br>REM "Christ" | நம்முடைய பிதாவாகிய தேவனும் நம்முடைய கர்த்தராகிய **இயேசுகிறிஸ்துவும்** உங்களிடத்திற்கு எங்களை நேராக வழிநடத்துவாராக. | இப்பொழுது நம் தந்தையாம் கடவுளும், நம் ஆண்டவராம் **இயேசுவும்** உங்களிடம் வருவதற்கான வழியை எங்களுக்குக் காட்டுவார்களாக! |
| 222 | 1 Thess. 3:13<br><br>REM "Christ" | இவ்விதமாய் நம்முடைய கர்த்தராகிய **இயேசுகிறிஸ்து** தமது பரிசுத்தவான்கள் அனைவரோடுங்கூட | இவ்வாறு நம் ஆண்டவர் **இயேசு** தம்முடைய தூயோர் அனைவரோடும் வரும்பொழுது, நம் தந்தையாம் |

| | | | |
|---|---|---|---|
| | | வரும்போது, நீங்கள் நம்முடைய பிதாவாகிய தேவனுக்கு முன்பாகப் பிழையற்ற பரிசுத்தமுள்ளவர்களாயிருக்கும்படி உங்கள் இருதயங்களை ஸ்திரப்படுத்துவாராக. | கடவுள்முன் நீங்கள் குற்றமின்றித் தூய்மையாக இருக்குமாறு அவர் உங்கள் உள்ளங்களை உறுதிப்படுத்துவாராக! |
| 223 | 1 Thess. 5:22<br><br>CHG "all appearance of evil" TO "every form of evil" | **பொல்லாங்காய்த் தோன்றுகிற எல்லாவற்றையும்** விட்டுவிலகுங்கள். | **எல்லா வகையான தீமைகளையும்** விட்டு விலகுங்கள். |
| 224 | 2 Thess. 1:8<br><br>REM "Christ" | 7 தேவனை அறியாதவர்களுக்கும், நம்முடைய கர்த்தராகிய **இயேசுகிறிஸ்துவின் சுவிசேஷத்திற்குக்** கீழ்ப்படியாதவர்களுக்கும் நீதியுள்ள ஆக்கினையைச் செலுத்தும்படிக்கு,<br>8 கர்த்தராகிய இயேசு தமது வல்லமையின் தூதரோடும், ஜூவாலித்து எரிகிற அக்கினியோடும், வானத்திலிருந்து வெளிப்படும்போது அப்படியாகும். | நம் ஆண்டவர் இயேசு வல்லமையுள்ள தம் தூதரோடு வானிலிருந்து வெளிப்படும் போது இப்படி நிகழும்.<br><br>8 அப்பொழுது அவர் தீப்பிழம்பின் நடுவே தோன்றி, கடவுளை அறியாதவர்களையும் நம் ஆண்டவர் **இயேசுவைப்பற்றிய நற்செய்தியை** ஏற்காதவர்களையும் தண்டிப்பார். |
| 225 | 2 Thess. 1:12<br><br>REM Christ | ஆகையால், நம்முடைய தேவனும் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவும் அளிக்கும் கிருபையின்படியே, | இதற்காகத்தான் நாங்கள் உங்களுக்காக என்றும் இறைவனிடம் வேண்டுகிறோம். நம் கடவுள் தாம் விடுத்த |

| | | | |
|---|---|---|---|
| | | நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் நாமம் உங்களிடத்திலும், நீங்கள் அவரிடத்திலும் மகிமைப்படும்பொருட்டாக. நம்முடைய தேவன் உங்களைத் தமது அழைப்புக்குப் பாத்திரராக்கவும், தமது தயையுள்ள சித்தம் முழுவதையும் விசுவாசத்தின் கிரியையையும் பலமாய் உங்களிடத்தில் நிறைவேற்றவும் வேண்டுமென்று, எப்பொழுதும் உங்களுக்காக வேண்டிக்கொள்ளுகிறோம். | அழைப்புக்கு உங்களைத் தகுதியுள்ளவராக்குவாராக! உங்கள் நல்லெண்ணம் ஒவ்வொன்றையும், நம்பிக்கையால் தூண்டப்படும் ஒவ்வொரு செயலையும் தம் வல்லமையால் நிறைவுறச் செய்வாராக! இவ்வாறு நம் கடவுளும் ஆண்டவர் இயேசு கிறிஸ்துவும் அளிக்கும் அருளுக்கேற்ப, உங்களால் நம் ஆண்டவராகிய இயேசுவின் பெயருக்கும் அவரால் உங்களுக்கும் மேன்மை உண்டாகுக! |
| 226 | 1 Timothy 1:1<br><br>REM Lord | நம்முடைய இரட்சகராயிருக்கிற தேவனும், நம்முடைய நம்பிக்கையாயிருக்கிற **கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவும்** கட்டளையிட்டபடியே, இயேசுகிறிஸ்துவின் அப்போஸ்தலனாயிருக்கிற பவுல், | விசுவாச அடிப்படையில் என் உண்மையான பிள்ளை திமொத்தேயுவுக்கு நம் மீட்பராம் கடவுளும், நம்மை எதிர்நோக்குடன் வாழச் செய்யும் கிறிஸ்து இட்ட கட்டளையின்படி **கிறிஸ்து இயேசுவின்** திருத்தூதனான பவுல் எழுதுவது; |
| 227 | 1 Timothy 1:17<br><br>REM "wise" (the only wise God) | நித்தியமும் அழிவில்லாமையும் அதரிசனமுமுள்ள ராஜனுமாய், தாம் **ஒருவரே ஞானமுள்ள தேவனுமாயிருக்கிறவருக்கு,** | அழிவில்லாத, கண்ணுக்குப் புலப்படாத, எக்காலத்துக்கும் அரசராயிருக்கின்ற **ஒரே கடவுளுக்கு என்றென்றும்** மாண்பும் மாட்சியும் உரித்தாகுக! ஆமென். |

| | | | |
|---|---|---|---|
| | | கனமும் மகிமையும் சதாகாலங்களிலும் உண்டாயிருப்பதாக. ஆமென். | |
| 228 | 1 Timothy 2:7<br><br>REM "in Christ" (...the truth in Christ) | இதற்காகவே நான் பிரசங்கியாகவும், அப்போஸ்தலனாகவும், புறஜாதிகளுக்கு விசுவாசத்தையும் சத்தியத்தையும் விளங்கப்பண்ணுகிறபோதகன ாகவும் நியமிக்கப்பட்டிருக்கிறேன்; நான் பொய் சொல்லாமல் **கிறிஸ்துவுக்குள் உண்மையைச்** சொல்லுகிறேன். | இதற்காகவே நான் நற்செய்தியை அறிவிப்பவனாகவும் திருத்தூதனாகவும் விசுவாசத்தையும் உண்மையையும் பிற இனத்தாருக்குக் கற்பிக்கும் போதனைகனாகவும் ஏற்படுத்தப்பட்டேன். **நான் சொல்வது உண்மையே;** பொய் அல்ல. |
| 229 | 1 Timothy 3:16<br><br>CHG "God" TO "he" (God manifest in the flesh) | அன்றியும், தேவபக்திக்குரிய இரகசியமானது யாவரும் ஒப்புக்கொள்ளுகிறபடியே மகாமேன்மையுள்ளது. **தேவன் மாம்சத்திலே வெளிப்பட்டார்,** ஆவியிலே நீதியுள்ளவரென்று விளங்கப்பட்டார், தேவதூதர்களால் காணப்பட்டார், புறஜாதிகளிடத்தில் பிரசங்கிக்கப்பட்டார், உலகத்திலே விசுவாசிக்கப்பட்டார், மகிமையிலே ஏறெடுத்துக்கொள்ளப்பட்டார். | நமது சமயத்தின் மறை உண்மை உயர்வானது என்பதில் ஐயமேயில்லை. அது பின்வருமாறு; “**மானிடராய் அவர் வெளிப்படுத்தப்பட்டார்;** தூய ஆவியால் நேர்மையாளர் என மெய்ப்பிக்கப்பட்டார்; வானதூதருக்குத் தோன்றினார். பிற இனத்தாருக்குப் பறைசாற்றப்பட்டார்; உலகினரால் நம்பிக்கையோடு ஏற்கப்பெற்றார்; மாட்சியோடு விண்ணேற்றமடைந்தார். |
| 230 | 1 Timothy 4:12 | உன் இளமையைக்குறித்து ஒருவனும் உன்னை அசட்டைபண்ணாதபடிக்கு, நீ | நீ இளைஞனாய் இருப்பதால் யாரும் உன்னைத் தாழ்வாகக் கருதாதிருக்கட்டும். பேச்சு, |

| | | | |
|---|---|---|---|
| | REM "in spirit" | வார்த்தையிலும், நடக்கையிலும், அன்பிலும், **ஆவியிலும்,** விசுவாசத்திலும், கற்பிலும், விசுவாசிகளுக்கு மாதிரியாயிரு. | நடத்தை, அன்பு, நம்பிக்கை, தூய்மை ஆகியவற்றில் நீ விசுவாசிகளுக்கு முன்மாதிரியாய் விளங்கு. |
| 231 | 1 Timothy 5:21<br><br>REM Lord | நீ பட்சபாதத்தோடே ஒன்றும் செய்யாமலும், விசாரிக்குமுன் நிருணயம்பண்ணாமலும், இவைகளைக் காத்து நடக்கும்படி, தேவனுக்கும், **கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவுக்கும்,** தெரிந்துகொள்ளப்பட்ட தூதருக்கும் முன்பாக, உறுதியாய்க் கட்டளையிடுகிறேன். | கடவுளின் முன்னிலையிலும் **கிறிஸ்து இயேசுவின் முன்னிலையிலும்** தேர்ந்துகொள்ளப்பட்ட வான தூதர்களின் முன்னிலையிலும் உனக்கு நான் முன்னெச்சரிக்கையாகக் கூறுவது; நான் சொன்னவற்றைக் கடைப்பிடித்து வா. முன்கூட்டியே முடிவெடுக்காதே. நடுநிலை தவறாதே. |
| 232 | 1 Timothy 6:1<br><br>CHG blasphemed TO spoken against et al. | **தேவனுடைய நாமமும் உபதேசமும் தூஷிக்கப்படாதபடிக்கு,** அடிமைத்தன நுகத்திற்குட்பட்டிருக்கிற வேலைக்காரர் யாவரும் தங்கள் எஜமான்களை எல்லாக்கனத்திற்கும் பாத்திரரென்று எண்ணிக்கொள்ளக்கடவர்கள். | அடிமைத்தளையில் இருப்போர் தங்கள் தலைவர்களை முழு மதிப்புக்கு உரியவர்களாகக் கருதவேண்டும். அப்பொழுது **கடவுளின் பெயரும் போதனையும் பழிச்சொல்லுக்கு** உள்ளாகாது. |
| 233 | 1 Timothy 6:5<br><br>CHG gain is godliness TO godliness is a means of | கெட்ட சிந்தையுள்ளவர்களும் சத்தியமில்லாதவர்களும் **தேவபக்தியை ஆதாயத்தொழிலென்று எண்ணுகிறவர்களுமாயிருக்கிற** மனுஷர்களால் உண்டாகும் | ஓயாத மோதல்கள் முதலியன இவற்றிலிருந்தே உண்டாகின்றன. உண்மையை இழந்தவர்களிடமும் சீரழிந்த மனத்தைக் கொண்டவரிடமும் இவை காணப்படுகின்றன. |

| | | | |
|---|---|---|---|
| | gain et al. | மாறுபாடான தர்க்கங்களும் பிறக்கும்; இப்படிப்பட்டவர்களை விட்டு விலகு. | |
| 234 | 1 Timothy 6:5<br><br>REM "from such withdraw thyself" | கெட்ட சிந்தையுள்ளவர்களும் சத்தியமில்லாதவர்களும் தேவபக்தியை ஆதாயத்தொழிலென்று எண்ணுகிறவர்களுமாயிருக்கிற மனுஷர்களால் உண்டாகும் மாறுபாடான தர்க்கங்களும் பிறக்கும்; **இப்படிப்பட்டவர்களை விட்டு விலகு.** | ஓயாத மோதல்கள் முதலியன இவற்றிலிருந்தே உண்டாகின்றன. உண்மையை இழந்தவர்களிடமும் சீரழிந்த மனத்தைக் கொண்டவரிடமும் இவை காணப்படுகின்றன. |
| 235 | 1 Timothy 6:10<br><br>CHG "root of all evil" TO "root of all kinds of evil" | பண ஆசை **எல்லாத் தீமைக்கும் வேராயிருக்கிறது**; சிலர் அதை இச்சித்து, விசுவாசத்தைவிட்டு வழுவி, அநேக வேதனைகளாலே தங்களை உருவக் குத்திக்கொண்டிருக்கிறார்கள். | பொருள் ஆசையே **எல்லாத் தீமைகளுக்கும் ஆணிவேர்.** அந்த ஆசையால் சிலர் விசுவாசத்தினின்று பிறழ்ந்து திரிந்து பல வேதனைகளைத் தாங்களாகவே தங்கள்மேல் வருவித்துக் கொள்கிறார்கள். |
| 236 | 1 Timothy 6:19<br><br>CHG "eternal life" TO "the life that is truly life" | **நித்திய ஜீவனைப்** பற்றிக்கொள்ளும்படி வருங்காலத்திற்காகத் தங்களுக்கு நல்ல ஆதாரத்தைப் பொக்கிஷமாக வைக்கவும் அவர்களுக்குக் கட்டளையிடு. | இவ்வாறு அவர்கள் தங்களது **வருங்காலத்திற்கென்று நல்லதோர்** அடித்தளமாக இச்செல்வத்தைச் சேமித்துவைப்பதால் **உண்மையான வாழ்வை** அடைய முடியும். |
| 237 | 1 Timothy 6:20<br><br>CHG | ஓ தீமோத்தேயுவே, உன்னிடத்தில் ஒப்புவிக்கப்பட்டதை நீ காத்துக்கொண்டு, சீர்கேடான | திமொத்தேயு, உன்னிடம் ஒப்;படைக்கப்பட்டதைப் பாதுகாப்பாயாக. உலகப் போக்கிலான |

|  |  |  |  |
|---|---|---|---|
|  | "science" TO "knowledge" | வீண்பேச்சுகளுக்கும், ஞானமென்று பொய்யாய்ப் பேர்பெற்றிருக்கிற கொள்கையின் விபரீதங்களுக்கும் விலகு. | வீண்பேச்சுக்களிலிருந்தும், ஞானம் எனத் தவறாகப் பெயர் பெற்றிருக்கும் முரண்பாடான கருத்துகளிலிருந்தும் விலகியிரு. |
| 238 | 2 Timothy 1:11<br><br>REM "of the gentiles" | அதற்கு நான் பிரசங்கியாகவும், அப்போஸ்தலனாகவும், **புறஜாதியாருக்குப் போதகனாகவும்** நியமிக்கப்பட்டேன். | அந்த நற்செய்தியை அறிவிப்பவனாகவும் திருத்தூதனாகவும் போதகனாகவும் நான் ஏற்படுத்தப்பட்டுள்ளேன். |
| 239 | 2 Timothy 2:15<br><br>REM "study" (only command to study the word) | நீ வெட்கப்படாத ஊழியக்காரனாயும் சத்திய வசனத்தை **நிதானமாய்ப் பகுத்துப்** போதிக்கிறவனாயும் உன்னை தேவனுக்கு முன்பாக உத்தமனாக நிறுத்தும்படி ஜாக்கிரதையாயிரு. | நீ கடவுள்முன் ஏற்புடையோனாக நிற்க முழு முயற்சி செய்; உண்மையின் வார்த்தையை நேர்மையாய்ப் பகுத்துக் கூறும் பணியாளாகிய நீ வெட்கமுற வேண்டியதில்லை. |
| 240 | 2 Timothy 3:3<br><br>CHG of those that are good TO good | சுபாவ அன்பில்லாதவர்களாயும், இணங்காதவர்களாயும், அவதூறு செய்கிறவர்களாயும், இச்சையடக்கமில்லாதவர்களாயும், கொடுமையுள்ளவர்களாயும், **நல்லோரைப் பகைக்கிறவர்களாயும்,** | அன்புணர்வு அற்றோர், ஒத்துப் போகாதோர், புறங்கூறுவோர், தன்னடக்கமற்றோர், வன்முறையாளர், **நன்மையை விரும்பாதோர்,** |
| 241 | 2 Timothy 4:1<br><br>REM "the Lord" | நான் தேவனுக்கு முன்பாகவும், உயிரோடிருக்கிறவர்களையும் மரித்தவர்களையும் | கடவுள் முன்னிலையிலும் வாழ்வோருக்கும் இறந்தோருக்கும் தீர்ப்பு அளிக்கப் போகிற **கிறிஸ்து** |

| | | | |
|---|---|---|---|
| | | நியாயந்தீர்க்கப்போகிற **கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவுக்கு** முன்பாகவும், அவருடைய பிரசன்னமாகுதலையும் அவருடைய ராஜ்யத்தையும் சாட்சியாக வைத்துக் கட்டளையிடுகிறதாவது: | **இயேசு** முன்னிலையிலும் அவர் தோன்றப்போவதை முன்னிட்டும் அவரது ஆளுகையை முன்னிட்டும் நான் ஆணையிட்டுக் கூறுவது; |
| 242 | 2 Timothy 4:22<br><br>REM "Jesus Christ" | **கர்த்தராகிய இயேசுகிறிஸ்து** உன் ஆவியுடனேகூட இருப்பாராக. கிருபை உங்களோடிருப்பதாக. ஆமென் | **ஆண்டவர் உன்னோடு** இருப்பாராக! இறை அருள் உங்களோடு இருப்பதாக! |
| 243 | Hebrews 1:3<br><br>CHG "by himself purged our sins" TO "provided purification for sins" | இவர் அவருடைய மகிமையின் பிரகாசமும், அவருடைய தன்மையின் சொரூபமாயிருந்து, சர்வத்தையும் தம்முடைய வல்லமையுள்ள வசனத்தினாலே தாங்குகிறவராய், **தம்மாலேதாமே நம்முடைய பாவங்களை நீக்கும் சுத்திகரிப்பை உண்டுபண்ணி,** உன்னதத்திலுள்ள மகத்துவமானவருடைய வலது பாரிசத்திலே உட்கார்ந்தார். | கடவுளுடைய மாட்சிமையின் சுடரொளியாகவும், அவருடைய இயல்பின் அச்சுப் பதிவாகவும் விளங்கும் இவர், தம் வல்லமைமிக்க சொல்லால் எல்லாவற்றையும் தாங்கி நடத்துகிறார். மக்களைப் **பாவங்களிலிருந்து தூய்மைப் படுத்தியபின்,** விண்ணகத்தில் இவர் பெருமைமிக்க கடவுளின் வலப்பக்கத்தில் வீற்றிருக்கிறார். |
| 244 | Hebrews 2:7<br><br>REM LAST 10 WORDS (and didst set him over the | அவனை தேவதூதரிலும் சற்றுச் சிறியவனாக்கினீர்; மகிமையினாலும் கனத்தினாலும் அவனுக்கு முடிசூட்டி, **உம்முடைய கரத்தின் கிரியைகளின்மேல்** | ஆயினும் நீர் அவர்களை வானதூதரை விடச் சற்றே சிறியவர் ஆக்கியுள்ளீர்; மாட்சியையும் மேன்மையையும் அவர்களுக்கு முடியாகச் சூட்டியுள்ளீர். **உமது கை** |

| | works...) | **அவனை அதிகாரியாக வைத்து, சகலத்தையும் அவனுடைய பாதங்களுக்குக் கீழ்ப்படுத்தினீர் என்று சொன்னான்.** | **படைத்தவற்றுக்கு மேலாக அவர்களை நியமித்தீர்.** |
|---|---|---|---|
| 245 | Hebrews 3:1<br><br>REM "Christ Jesus" (High Priest of our...) | இப்படியிருக்க, பரம அழைப்புக்குப் பங்குள்ளவர்களாகிய பரிசுத்த சகோதரரே, நாம் அறிக்கைபண்ணுகிற அப்போஸ்தலரும் **பிரதான ஆசாரியருமாயிருக்கிற கிறிஸ்து இயேசுவைக்** கவனித்துப்பாருங்கள். | எனவே, தூய சகோதர சகோதரிகளே, விண்ணக அழைப்பில் பங்கு கொண்டவர்களே, நாம் அறிக்கையிடும் திருத்தூதரும் **தலைமைக் குருவுமான இயேசுவைப்பற்றி** எண்ணிப்பாருங்கள். |
| 246 | Hebrews 7:21<br><br>REM "after the order of Melchisedec" | 20 அன்றியும், அவர்கள் ஆணையில்லாமல் ஆசாரியராக்கப்படுகிறார்கள்; **இவரோ; நீர் மெல்கிசேதேக்கின் முறைமையின்படி என்றென்றைக்கும் ஆசாரியராயிருக்கிறீர் என்று கர்த்தர் ஆணையிட்டார்,** மனம்மாறாமலும் இருப்பார் என்று தம்முடனே சொன்னவராலே ஆணையோடே ஆசாரியரானார்.<br>21 ஆனதால், இயேசுவானவர் ஆணையின்படியே ஆசாரியராக்கப்பட்டது எவ்வளவு விசேஷித்த காரியமோ, | இவரது குருத்துவப் பணியோ ஆணையிட்டு அளிக்கப்பட்ட ஒன்று; லேவியர் குருக்கள் ஆனபோது ஆணை எதுவும் இடப்படவில்லை.<br><br>21 **"நீர் என்றென்றும் குருவே என்று ஆண்டவர் ஆணையிட்டுச் சொன்னார்.** அவர் தம் மனத்தை மாற்றிக் கொள்ளார்" என்று கடவுள் அவரிடம் ஆணையிட்டுக் கூறினார் அன்றோ! |

| 247 | Hebrews 10:34<br><br>REM "in heaven" (ye have in heaven a better) | நான் கட்டப்பட்டிருக்கையில் நீங்கள் என்னைக்குறித்துப் பரிதபித்ததுமன்றி, **பரலோகத்தில் அதிக மேன்மையும் நிலையுள்ளதுமான சுதந்தரம் உங்களுக்கு உண்டென்று** அறிந்து, உங்கள் ஆஸ்திகளையும் சந்தோஷமாய்க் கொள்ளையிடக் கொடுத்தீர்கள். | கைதிகளுக்குப் பரிவிரக்கம் காட்டினீர்கள். உங்கள் உடைமைகள் பறிமுதல் செய்யப்பட்டபோதும், மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டீர்கள். ஏனெனில் **சிறந்த, நிலையான உடைமைகள்** உங்களுக்கு உள்ளன என்பதை அறிவீர்கள். |
|---|---|---|---|
| 248 | Hebrews 11:11<br><br>REM "was delivered of a child" | விசுவாசத்தினாலே சாராளும் வாக்குத்தத்தம்பண்ணினவர் உண்மையுள்ளவரென்றெண் ணி, **கர்ப்பந்தரிக்கப் பெலனடைந்து, வயதுசென்றவளாயிருந்தும் பிள்ளைபெற்றாள்.** | ஆபிரகாம் வயது முதியவராயும் சாரா கருவுற இயலாதவராயும் இருந்தபோதிலும், **அவர் ஒரு தந்தையாவதற்கான** ஆற்றல் பெற்றதும் நம்பிக்கையினால்தான். ஏனெனில் வாக்களித்தவர் நம்பிக்கைக்குரியவர் என அவர் கருதினார். |
| 249 | James 5:16<br><br>CHG "faults" TO "sins" | நீங்கள் சொஸ்தமடையும்படிக்கு, **உங்கள் குற்றங்களை ஒருவருக்கொருவர் அறிக்கையிட்டு,** ஒருவருக்காக ஒருவர் ஜெபம்பண்ணுங்கள். நீதிமான் செய்யும் ஊக்கமான வேண்டுதல் மிகவும் பெலனுள்ளதாயிருக்கிறது. | ஆகவே ஒருவருக்கொருவர் **பாவங்களை அறிக்கை செய்து** கொள்ளுங்கள். ஒருவர் மற்றவருக்காக இறைவனிடம் வேண்டுங்கள். அப்பொழுது குணமடைவீர்கள். நேர்மையாளருடைய வல்லமைமிக்க மன்றாட்டு பயன் விளைவிக்கும். |
| 250 | 1 Peter 1:22<br><br>REM "through | ஆகையால் நீங்கள் மாயமற்ற சகோதர சிநேகமுள்ளவர்களாகும்படி, | **உண்மைக்குக் கீழ்ப்படிந்து** உங்கள் ஆன்மா தூய்மை அடைந்துள்ளதால் நீங்கள் |

|  | the Spirit" | **ஆவியினாலே சத்தியத்திற்குக் கீழ்ப்படிந்து,** உங்கள் ஆத்துமாக்களைச் சுத்தமாக்கிக்கொண்டவர்களா யிருக்கிறபடியால், சுத்த இருதயத்தோடே ஒருவரிலொருவர் ஊக்கமாய் அன்புகூருங்கள்; | வெளிவேடமற்ற முறையில் சகோதர அன்பு காட்ட முடியும். எனவே நீங்கள், தூய உள்ளத்தோடு ஒருவருக்கொருவர் ஆழ்ந்த அன்பு காட்டுங்கள். |
|---|---|---|---|
| 251 | 1 Peter 2:2<br><br>REM "of the word" (sincere milk of the word) | 3 நீங்கள் வளரும்படி, புதிதாய்ப் பிறந்த குழந்தைகளைப்போல, **திருவசனமாகிய களங்கமில்லாத ஞானப்பாலின்மேல் வாஞ்சையாயிருங்கள்.** | புதிதாய்ப் பிறந்த குழந்தைகள்போல, **வஞ்சகமற்ற வார்த்தையாகிய பாலை அருந்த** ஆர்வமுள்ளவர்களாயிருங்கள். |
| 252 | 1 Peter 2:2<br><br>CHG "grow thereby" TO "grow up in your salvation" | இப்படியிருக்க, கர்த்தர் தயையுள்ளவரென்பதை நீங்கள் ருசிபார்த்ததுண்டானால்,<br>2 சகல துர்க்குணத்தையும், சகலவித கபடத்தையும், வஞ்சகங்களையும், பொறாமைகளையும், சகலவித புறங்கூறுதலையும் ஒழித்துவிட்டு<br>3 **நீங்கள் வளரும்படி,** புதிதாய்ப் பிறந்த குழந்தைகளைப்போல, திருவசனமாகிய களங்கமில்லாத ஞானப்பாலின்மேல் வாஞ்சையாயிருங்கள். | ஆண்டவர் எத்துணை இனியவர் என்பதை நீங்கள் சுவைத்திருந்தால், எல்லா வகையான தீமையையும் வஞ்சகத்தையும் வெளிவேடம், பொறாமை, அவதூறு ஆகிய யாவற்றையும் அகற்றுங்கள்;<br><br>2 புதிதாய்ப் பிறந்த குழந்தைகள்போல, வஞ்சகமற்ற வார்த்தையாகிய பாலை அருந்த ஆர்வமுள்ளவர்களாயிருங்கள்.<br><br>3 இதை அருந்துவதால் நீங்கள் **மீட்பில் வளருவீர்கள்.** |
| 253 | 1 Peter 3:15 | **கர்த்தராகிய தேவனை** உங்கள் | உங்கள் உள்ளத்தில் **கிறிஸ்துவை** |

| | | | |
|---|---|---|---|
| | CHG the Lord God TO Christ as Lord et al. | இருதயங்களில் பரிசுத்தம்பண்ணுங்கள்; உங்களிலிருக்கிற நம்பிக்கையைக்குறித்து உங்களிடத்தில் விசாரித்துக் கேட்கிற யாவருக்கும் சாந்தத்தோடும் வணக்கத்தோடும் உத்தரவுசொல்ல எப்பொழுதும் ஆயத்தமாயிருங்கள். | **ஆண்டவராகக்** கொண்டு அவரைத் தூயவரெனப் போற்றுங்கள். நீங்கள் எதிர்நோக்கி இருப்பதைக் குறித்து யாராவது விளக்கம் கேட்டால் விடையளிக்க நீங்கள் எப்பொழுதும் ஆயத்தமாய் இருங்கள். |
| 254 | 1 Peter 4:1<br><br>REM "for us" (Christ hath suffered for us) | இப்படியிருக்க, **கிறிஸ்து நமக்காக மாம்சத்திலே பாடுபட்டபடியால்,** நீங்களும் அப்படிப்பட்ட சிந்தையை ஆயுதமாகத் தரித்துக்கொள்ளுங்கள். | எனவே, **கிறிஸ்து தம் ஊனுடலில் துன்புற்றார்.** அப்பொழுது அவர் கொண்டிருந்த மனநிலையை நீங்களும் படைக்கலமாகப் ப+ண்டுகொள்ளுங்கள். ஊனுடலில் துன்புறுவோர் பாவத்தை விட்டு விடுகின்றனர். |
| 255 | 1 Peter 4:14<br><br>REM LAST 15 WORDS | நீங்கள் கிறிஸ்துவின் நாமத்தினிமித்தம் நிந்திக்கப்பட்டால் பாக்கியவான்கள்; ஏனென்றால் தேவனுடையய ஆவியாகிய மகிமையுள்ள ஆவியானவர் உங்கள்மேல் தங்கியிருக்கிறார்; **அவர்களாலே தூஷிக்கப்படுகிறார்; உங்களாலே மகிமைப்படுகிறார்.** | கிறிஸ்துவின்பொருட்டுப் பிறர் உங்கள்மீது வசை கூறும்போது நீங்கள் பேறுபெற்றவர்கள். ஏனெனில், கடவுளின் மாட்சிமிக்க தூய ஆவி உங்கள் மேல் தங்கும். |
| 256 | 1 Peter 5:10 | **கிறிஸ்து இயேசுவுக்குள் நம்மைத் தமது நித்திய** | **எல்லா அருளும் நிறைந்த கடவுள்,** இயேசு |

| | REM "Jesus" | **மகிமைக்கு அழைத்தவராயிருக்கிற சகல கிருபையும் பொருந்திய தேவன்தாமே** கொஞ்சக்காலம் பாடநுபவிக்கிற உங்களைச் சீர்ப்படுத்தி, ஸ்திரப்படுத்தி, பலப்படுத்தி, நிலைநிறுத்துவாராக; | கிறிஸ்துவுக்குள் என்றும் நிலைக்கும் தம் மாட்சியில் பங்குகொள்ள உங்களை அழைத்திருக்கிறார். சிறிது காலத் துன்பங்களுக்குப்பின் அவர் உங்களைப் சீர்ப்படுத்தி, உறுதிப்படுத்தி, வலுப்படுத்தி நிலைநிறுத்துவார். |
|---|---|---|---|
| 257 | 1 Peter 5:11<br><br>REM "glory (to Him be glory and dominion) | **அவருக்கு மகிமையும் வல்லமையும்** சதாகாலங்களிலும் உண்டாயிருப்பதாக. ஆமென். | **அவரது வல்லமை** என்றென்றைக்கும் உள்ளது. ஆமென். |
| 258 | 1 Peter 5:14<br><br>REM Jesus | ஒருவரையொருவர் அன்பின் முத்தத்தோடே வாழ்த்துதல் செய்யுங்கள். கிறிஸ்து **இயேவுக்குள்ளான** உங்கள் அனைவருக்கும் சமாதானமுண்டாவதாக. ஆமென். | அன்பு முத்தம் கொடுத்து நீங்கள் ஒருவர் மற்றவரை வாழ்த்துங்கள். இயேசு கிறிஸ்துவோடு இணைந்து வாழும் உங்கள் அனைவருக்கும் அமைதி உரித்தாகுக! |
| 259 | 2 Peter 2:1<br><br>CHG damnable TO destructive | கள்ளத்தீர்க்கதரிசிகளும் ஜனங்களுக்குள்ளே இருந்தார்கள், அப்படியே உங்களுக்குள்ளும் கள்ளப்போதகர்கள் இருப்பார்கள்; **அவர்கள் கேட்டுக்கேதுவான வேதப்புரட்டுகளைத் தந்திரமாய் நுழையப்பண்ணி,** தங்களைக் கிரயத்துக்குக் கொண்ட ஆண்டவரை மறுதலித்து, தங்களுக்குத் | முற்காலத்தில் மக்களிடையே போலி இறைவாக்கினர் தோன்றினர். அவ்வாறே உங்களிடையேயும் போலிப் போதகர்கள் தோன்றுவார்கள். **அவர்கள் அழிவை விளைவிக்கும் கொள்கைகளைப் புகுத்திவிடுவார்கள்;** தங்களை விலைகொடுத்து மீட்ட ஆண்டவரையும் மறுதலிப்பார்கள்; **விரைவில் அழிவைத் தம்மீது** |

| | | | |
|---|---|---|---|
| | | **தீவிரமான அழிவை வருவித்துக்கொள்ளுவார்கள்.** | **வருவித்துக்கொள்வார்கள்.** |
| 260 | 2 Peter 2:17<br><br>REM "for ever" (darkness is reserved for ever) | இவர்கள் தண்ணீரில்லாத கிணறுகளும், சுழல்காற்றினால் அடியுண்டோடுகிற மேகங்களுமாயிருக்கிறார்கள்; **என்றென்றைக்குமுள்ள காரிருளே இவர்களுக்கு வைக்கப்பட்டிருக்கிறது,** | இவர்கள் நீரற்ற ஊற்றுகள்; புயலால் அடித்துச் செல்லப்படும் மேகங்கள். **காரிருளே இவர்களுக்காக ஒதுக்கப்பட்டுள்ளது.** |
| 261 | 2 Peter 3:9<br><br>REM "us" TO "you" | தாமதிக்கிறார் என்று சிலர் எண்ணுகிறபடி, கர்த்தர் தமது வாக்குத்தத்தத்தைக்குறித்துத் தாமதமாயிராமல்; ஒருவரும் கெட்டுப்போகாமல் எல்லாரும் மனந்திரும்பவேண்டுமென்று விரும்பி, **நம்மேல் நீடிய பொறுமையுள்ளவராயிருக்கிறார்.** | ஆண்டவர் தம் வாக்குறுதியை நிறைவேற்றக் காலந்தாழ்த்துவதாகச் சிலர் கருதுகின்றனர். ஆனால், அவர் அவ்வாறு காலந்தாழ்த்துவதில்லை. **மாறாக, உங்களுக்காகப் பொறுமையோடிக்கிறார்.** யாரும் அழிந்து போகாமல், எல்லாரும் மனம் மாறவேண்டுமென விரும்புகிறார். |
| 262 | 1 John 1:7<br><br>REM "Christ" | அவர் ஒளியிலிருக்கிறதுபோல நாமும் ஒளியிலே நடந்தால் ஒருவரோடொருவர் ஐக்கியப்பட்டிருப்போம்; **அவருடைய குமாரனாகிய இயேசுகிறிஸ்துவின் இரத்தம்** சகல பாவங்களையும் நீக்கி, நம்மைச் சுத்திகரிக்கும். | மாறாக, அவர் ஒளியில் இருப்பதுபோல் நாம் ஒளியில் நடப்போமானால், ஒருவரோடு ஒருவர் நட்புறவு கொண்டிருப்போம். மேலும் **அவர் மகனாகிய இயேசுவின் இரத்தம்** எல்லாப் பாவத்தினின்றும் நம்மைத் தூய்மைப்படுத்தும். |
| 263 | 1 John 3:16 | **அவர் தம்முடைய ஜீவனை நமக்காகக் கொடுத்ததினாலே** | கிறிஸ்து நமக்காகத் தம் உயிரைக் கொடுத்தார். **இதனால்** |

| | | | |
|---|---|---|---|
| | REM "of God" (love of God) | **அன்பு இன்னதென்று அறிந்திருக்கிறோம்**; நாமும் சகோதரருக்காக ஜீவனைக்கொடுக்கக் கடனாளிகளாயிருக்கிறோம். | **அன்பு இன்னதென்று அறிந்து கொண்டோம்.** ஆகவே நாமும் நம் சகோதரர் சகோதரிகளுக்காக உயிரைக் கொடுக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். |
| 264 | 1 John 4:3<br><br>REM "Christ is come in the flesh" (antichrist) | **மாம்சத்தில் வந்த இயேசுகிறிஸ்துவை அறிக்கைபண்ணாத எந்த ஆவியும் தேவனால் உண்டானதல்ல;** வருமென்று நீங்கள் கேள்விப்பட்ட அந்திக்கிறிஸ்துவினுடைய ஆவி அதுவே, அது இப்பொழுதும் உலகத்தில் இருக்கிறது. | **இயேசுவை ஏற்று அறிக்கையிட மறுக்கும் தூண்டுதல் எதுவும் கடவுளிடமிருந்து வருவதல்ல.** இதுவே எதிர்க்கிறிஸ்துவிடமிருந்து வரும் தூண்டுதல். இந்த எதிர்க் கிறிஸ்து வருவதாக நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்கள்! இதோ! இப்போதே அவன் உலகில் இருக்கிறான். |
| 265 | 1 John 4:9<br><br>REM "begotten" | **தம்முடைய ஒரேபேறான குமாரனாலே நாம் பிழைக்கும்படிக்கு தேவன்** அவரை இவ்வுலகத்திலே அனுப்பினதினால் தேவன் நம்மேல் வைத்த அன்பு வெளிப்பட்டது. | நாம் வாழ்வு பெறும் பொருட்டுக் **கடவுள் தம் ஒரே மகனை** உலகிற்கு அனுப்பினார். இதனால் கடவுள் நம்மீது வைத்த அன்பு வெளிப்பட்டது. |
| 266 | 1 John 4:19<br><br>REM him (We love him, because he first...) | அவர் முந்தி நம்மிடத்தில் அன்புகூர்ந்தபடியால் நாமும் அவரிடத்தில் அன்புகூருகிறோம். | அவரே முதலில் நம்மிடம் அன்பு செலுத்தியதால் நாமும் அன்பு செலுத்துகிறோம். |
| 267 | 1 John 5:7<br><br>REM LAST 15 WORDS | (பரலோகத்திலே சாட்சியிடுகிறவர்கள் மூவர், பிதா, வார்த்தை, பரிசுத்த ஆவி என்பவர்களே, | எனவே சான்று அளிப்பவை மூன்று இருக்கின்றன. |

| | | இம்மூவரும்<br>ஒன்றாயிருக்கிறார்கள்; | |
|---|---|---|---|
| 268 | 1 John 5:8<br><br>REM FIRST 9 WORDS | பூலோகத்திலே) சாட்சியிடுகிறவைகள் மூன்று, ஆவி, ஜலம், இரத்தம் என்பவைகளே, இம்மூன்றும் ஒருமைப்பட்டிருக்கிறது. | தூய ஆவியும் நீரும் இரத்தமுமே அவை. இம்மூன்றும் ஒரே நோக்கம் கொண்டவை. |
| 269 | 1 John 5:13<br><br>REM LAST 13 WORDS | உங்களுக்கு நித்தியஜீவன் உண்டென்று **நீங்கள் அறியவும், தேவகுமாரனுடைய நாமத்தின்மேல் நீங்கள் விசுவாசமாயிருக்கவும், தேவகுமாரனுடைய நாமத்தின்மேல் விசுவாசமாயிருக்கிற உங்களுக்கு** இவைகளை எழுதியிருக்கிறேன். | **இறைமகனிடம் நம்பிக்கை** கொண்டுள்ளோருக்கு **நிலைவாழ்வு உண்டு என நீங்கள் அறிந்து கொள்ளுமாறு** உங்களுக்கு இவற்றை எழுதுகிறேன் |
| 270 | 1 John 5:13<br><br>ADD continue to (denys eternal security) | உங்களுக்கு **நித்தியஜீவன் உண்டென்று நீங்கள் அறியவும்,** தேவகுமாரனுடைய நாமத்தின்மேல் நீங்கள் விசுவாசமாயிருக்கவும், தேவகுமாரனுடைய நாமத்தின்மேல் விசுவாசமாயிருக்கிற உங்களுக்கு இவைகளை எழுதியிருக்கிறேன். | இறைமகனிடம் நம்பிக்கை கொண்டுள்ளோருக்கு **நிலைவாழ்வு உண்டு என நீங்கள்** அறிந்து கொள்ளுமாறு உங்களுக்கு இவற்றை எழுதுகிறேன் |
| 271 | 2 John 1:3<br><br>REM the Lord | பிதாவாகிய தேவனாலும் **பிதாவின் குமாரனாயிருக்கிற கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினாலும்,** | இவ்வாறு உண்மையையும் அன்பையும் கொண்டு வாழும் நமக்கு **தந்தையாம் கடவுளிடமிருந்தும் அவர் மகன்** |

| | | கிருபையும் இரக்கமும் சமாதானமும், சத்தியத்தோடும் அன்போடுங்கூட, உங்களோடிருப்பதாக. | **இயேசு கிறிஸ்துவிடமிருந்தும்;** வரும் அருளும் இரக்கமும் அமைதியும் உரித்தாகும். |
|---|---|---|---|
| 272 | Jude 1:25<br><br>REM "wise" (Referring to God) | தாம் **ஒருவரே ஞானமுள்ளவருமாகிய நம்முடைய இரட்சகரான தேவனுக்குக்** கனமும் மகத்துவமும் வல்லமையும் அதிகாரமும் இப்பொழுதும் எப்பொழுதும் உண்டாவதாக. ஆமென். | **நம் ஆண்டவர் இயேசுகிறிஸ்துவின்** வழியாய், மாட்சியும் மாண்பும் ஆற்றலும் ஆட்சியும் ஊழிக் காலந்தொட்டு இன்றும் என்றென்றும் உரியன. ஆமென் ! |
| 273 | Rev. 1:8<br><br>REM "the beginning and the ending" | இருக்கிறவரும் இருந்தவரும் வருகிறவருமாகிய சர்வவல்லமையுள்ள கர்த்தர்: நான் அல்பாவும், ஒமெகாவும், **ஆதியும் அந்தமுமாயிருக்கிறேன் என்று** திருவுளம்பற்றுகிறார். | “அகரமும் னகரமும் நானே” என்கிறார் கடவுளாகிய ஆண்டவர். இருந்தவரும் இருக்கின்றவரும் வரவிருக்கின்றவரும் எல்லாம் வல்லவரும் அவரே. |
| 274 | Rev. 1:9<br><br>REM Christ (TWICE) | உங்கள் சகோதரனும், **இயேசுகிறிஸ்துவினிமித்தம்** வருகிற உபத்திரவத்திற்கும் அவருடைய ராஜ்யத்திற்கும் அவருடைய பொறுமைக்கும் உங்கள் உடன்பங்காளனுமாயிருக்கிற யோவானாகிய நான் தேவவசனத்தினிமித்தமும்,**இ யேசுகிறிஸ்துவைப்பற்றிய** சாட்சியினிமித்தமும், பத்மு என்னும் தீவிலே இருந்தேன். | உங்கள் சகோதரனும், **இயேசுவோடு** இணைந்த நிலையில் உங்கள் வேதனையிலும் ஆட்சியுரிமையிலும் மனவுறுதியிலும் பங்குகொள்பவனுமான யோவான் என்னும் நான் கடவுளின் வாக்கை அறிவித்து **இயேசுவுக்குச்** சான்று பகர்ந்ததால் பத்மு தீவுக்கு வர நேர்ந்தது. |

| | | | |
|---|---|---|---|
| 275 | Rev. 1:11<br><br>REM "I am Alpha and Omega, the first and the last . | அது: **நான் அல்பாவும் ஒமெகாவும், முந்தினவரும் பிந்தினவருமாயிருக்கிறேன்.** நீ காண்கிறதை ஒரு புஸ்தகத்தில் எழுதி, ஆசியாவிலிருக்கிற எபேசு, சிமிர்னா, பெர்கமு, தியத்தீரா, சர்தை, பிலதெல்பியா, லவோதிக்கேயா என்னும் பட்டணங்களிலுள்ள ஏழு சபைகளுக்கும் அனுப்பு என்று விளம்பினது. | "நீ காண்பதை ஒரு சுருளேட்டில் எழுதி, எபேசு, சிமிர்னா, பெர்காம், தியத்திரா, சர்தை, பிலதெல்பியா, இலவோதிக்கேயா ஆகிய ஏழு இடங்களிலும் உள்ள திருச்சபைகளுக்கு அதை அனுப்பி வை" என்று அக்குரல் கூறியது. |
| 276 | Rev. 1:18<br><br>REM hell | மரித்தேன், ஆனாலும், இதோ, சதாகாலங்களிலும் உயிரோடிருக்கிறேன், ஆமென்; **நான் மரணத்திற்கும் பாதாளத்திற்குமுரிய திறவுகோல்களை உடையவராயிருக்கிறேன்.** | வாழ்பவரும் நானே. இறந்தேன்; ஆயினும் இதோ என்றென்றும் வாழ்கின்றேன். **சாவின் மீதும் பாதாளத்தின் மீதும் எனக்கு அதிகாரம் உண்டு.** |
| 277 | Rev. 2:13<br><br>CHG Satan's seat TO Satan s throne | உன் கிரியைகளையும், **சாத்தானுடைய சிங்காசனமிருக்கிற இடத்தில் நீ** குடியிருக்கிறதையும், நீ என் நாமத்தைப் பற்றிக்கொண்டிருக்கிறதையும், சாத்தான் குடிகொண்டிருக்கிற இடத்திலே உங்களுக்குள்ளே எனக்கு உண்மையுள்ள சாட்சியான அந்திப்பா என்பவன் கொல்லப்பட்ட நாட்களிலும் என்னைப் பற்றும் விசுவாசத்தை நீ மறுதலியாமலிருந்ததையும் | நீ எங்குக் குடியிருக்கிறாய் என நான் அறிவேன். அங்கேதான் **சாத்தானின் அரியணை உள்ளது.** நீ என் பெயர் மீது உறுதியான பற்றுக் கொண்டுள்ளாய்; சாத்தான் குடியிருக்கும் இடத்தில், நம்பிக்கையுள்ள என் சாட்சியான அந்திப்பா உங்கள் நடுவே கொலை செய்யப்பட்ட காலத்தில்கூட நீ என்மீது கொண்டிருந்த நம்பிக்கையை விட்டு விலகவில்லை. |

| | | | |
|---|---|---|---|
| | | அறிந்திருக்கிறேன். | |
| 278 | Rev. 2:15<br><br>REM "which thing I hate" | அப்படியே நிக்கொலாய் மதஸ்தருடைய போதகத்தைக் கைக்கொள்ளுகிறவர்களும் உன்னிடத்திலுண்டு; **அதை நான் வெறுக்கிறேன்.** | இதுபோலவே நிக்கொலாயரின் போதனையில் பிடிப்புள்ள சிலரும் உன் நடுவில் உள்ளனர். |
| 279 | Rev. 5:14<br><br>REM "Him that liveth for ever and ever" | அதற்கு நான்கு ஜீவன்களும்: ஆமென் என்று சொல்லின இருபத்து நான்கு மூப்பர்களும் வணக்கமாய் **விழுந்து சதாகாலங்களிலும் உயிரோடிருக்கிறவரைத் தொழுதுகொண்டார்கள்.** | அதற்கு அந்த நான்கு உயிர்களும், “ஆமென்” என்றன. மூப்பர்கள் விழுந்து வணங்கினார்கள் |
| 280 | Rev. 6:8<br><br>REM Hell | நான் பார்த்தபோது, இதோ, மங்கின நிறமுள்ள ஒரு குதிரையைக் கண்டேன்; அதின்மேல் ஏறியிருந்தவனுக்கு மரணம் என்று பெயர்; **பாதாளம் அவன்பின் சென்றது.** பட்டயத்தினாலும், பஞ்சத்தினாலும், சாவினாலும், பூமியின் துஷ்டமிருகங்களினாலும், பூமியின் காற்பங்கிலுள்ளவர்களைக் கொலைசெய்யும்படியான அதிகாரம் அவைகளுக்குக் கொடுக்கப்பட்டது. | தொடர்ந்து வெளிறிய பச்சைக் குதிரை ஒன்றைக் கண்டேன். அதன்மேல் ஏறியிருந்தவரின் பெயர் சாவு. **பாதாளமும் அவரோடு சென்றது**. வாள், பஞ்சம், கொள்ளைநோய் ஆகியவற்றாலும் மண்ணுலகின் விலங்குகளாலும் உலகின் கால் பகுதியை அழிக்க சாவுக்கும் பாதாளத்துக்கும் அதிகாரம் அளிக்கப்பட்டது. |
| 281 | Rev. 6:17<br><br>CHG his | **அவருடைய கோபாக்கினையின்** மகா நாள் வந்துவிட்டது, யார் | ஏனெனில், **அவர்களது சினம்** வெளிப்படும் கொடிய நாள் வந்துவிட்டது. அதற்குமுன் |

| | | | |
|---|---|---|---|
| | wrath TO their wrath | நிலைநிற்கக்கூடும் என்றார்கள். | நிற்க யாரால் இயலும்?" என்று புலம்பினார்கள். |
| 282 | Rev. 8:13<br><br>CHG "angel" TO "eagle" | பின்பு, **ஒரு தூதன் வானத்தின் மத்தியிலே பறந்துவரக்கண்டேன்;** அவன் மகா சத்தமிட்டு: இனி எக்காளம் ஊதப்போகிற மற்ற மூன்று தூதருடைய எக்காளசத்தங்களினால் பூமியில் குடியிருக்கிறவர்களுக்கு ஐயோ, ஐயோ, ஐயோ (ஆபத்துவரும்) என்று சொல்லக்கேட்டேன். | இதன்பின் நான் ஒரு காட்சி கண்டேன். **நடுவானில் பறந்து கொண்டிருந்த கழுகு** ஒன்று உரத்த குரலில், "மற்ற மூன்று வானதூதர்களும் எக்காளங்களை இதோ முழக்கவிருக்கிறார்கள். அந்தோ! உலகில் வாழ்வோர்க்கு கேடு வரும்! ஐயகோ!" என்று கத்தக் கேட்டேன். |
| 283 | Rev. 11:15<br><br>CHG "kingdoms" TO "kingdom" | ஏழாம் தூதன் எக்காளம் ஊதினான்; **அப்பொழுது உலகத்தின் ராஜ்யங்கள்** நம்முடைய கர்த்தருக்கும், அவருடைய கிறிஸ்துவுக்குமுரிய ராஜ்யங்களாயின; அவர் சதாகாலங்களிலும் ராஜ்யபாரம்பண்ணுவார் என்னும் கெம்பீர சத்தங்கள் வானத்தில் உண்டாயின. | பின்னர் ஏழாவது வானதூதர் எக்காளம் முழக்கினார். உடனே விண்ணகத்தில் உரத்த குரல் ஒன்று எழுந்தது; **"உலகின் ஆட்சி உரிமை** நம் ஆண்டவருக்கும் அவருடைய மெசியாவுக்கும் உரியதாயிற்று. அவரே என்றென்றும் ஆட்சி புரிவார்" என்று முழக்கம் கேட்டது. |
| 284 | Rev. 11:17<br><br>REM "and art to come" | **இருக்கிறவரும் இருந்தவரும் வருகிறவருமாகிய சர்வவல்லமையுள்ள கர்த்தராகிய தேவனே,** உம்மை ஸ்தோத்திரிக்கிறோம்; தேவரீர் உமது மகா வல்லமையைக்கொண்டு ராஜ்யபாரம்பண்ணுகிறீர். | "கடவுளாகிய ஆண்டவரே, எல்லாம் வல்லவரே, **இருக்கின்றவரும் இருந்தவருமான** உமக்கு நன்றி செலுத்துகின்றோம்; ஏனெனில் நீர் உமது பெரும் வல்லமையை வெளிப்படுத்தி ஆட்சி செலுத்தலானீர். |

| 285 | Rev. 12:12<br><br>REM "inhabiters of" | ஆகையால் பரலோகங்களே! அவைகளில் வாசமாயிருக்கிறவர்களே! களிகூருங்கள். **பூமியிலும் சமுத்திரத்திலும் குடியிருக்கிறவர்களே! ஐயோ,** பிசாசானவன் தனக்குக் கொஞ்சக்காலமாத்திரம் உண்டென்று அறிந்து, மிகுந்த கோபங்கொண்டு, உங்களிடத்தில் இறங்கினபடியால், உங்களுக்கு ஆபத்துவரும் என்று சொல்லக்கேட்டேன். | இதன்பொருட்டு விண்ணுலகே, அதில் குடியிருப்போரே, மகிழ்ந்து கொண்டாடுங்கள். **மண்ணுலகே, கடலே, ஐயோ!** உங்களுக்குக் கேடு! தனக்குச் சிறிது காலமே எஞ்சியிருக்கிறது என்பதை அலகை அறிந்துள்ளது; அதனால் கடுஞ் சீற்றத்துடன் உங்களிடம் வந்துள்ளது." |
|---|---|---|---|
| 286 | Rev. 12:17<br><br>REM "Christ" | அப்பொழுது வலுசர்ப்பமானது ஸ்திரீயின்மேல் கோபங்கொண்டு, தேவனுடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறவர்களும், **இயேசுகிறிஸ்துவைக்குறித்துச் சாட்சியை** உடையவர்களுமாகிய அவளுடைய சந்ததியான மற்றவர்களுடனே யுத்தம்பண்ணப்போயிற்று. | 17 இதனால் அரக்கப்பாம்பு அப்பெண்மீது சினங் கொண்டு, அவருடைய எஞ்சிய பிள்ளைகளோடு போர் தொடுக்கப் புறப்பட்டுச் சென்றது. அவர்கள் கடவுளுடைய கட்டளைகளைக் கடைப்பிடித்து **இயேசுவுக்குச் சான்று** பகர்ந்தவர்கள்.<br><br>18 அரக்கப்பாம்பு கடற்கரையில் நின்றுகொண்டிருந்தது.<br><br>(Original KJV contains only 17 verses in this chapter!!) |
| 287 | Rev. 14:5<br><br>REM "before | இவர்களுடைய வாயிலே கபடம் காணப்படவில்லை; **இவர்கள் தேவனுடைய** | அவர்களது வாயினின்று பொய்யே வந்ததில்லை; ஏனெனில் அவர்கள் |

| | | | |
|---|---|---|---|
| | the throne of God" | **சிங்காசனத்திற்குமுன்பாக** மாசில்லாதவர்களாயிருக்கிறார்கள். | மாசற்றவர்கள். |
| 288 | Rev. 15:3<br><br>CHG King of saints TO King of the ages et al. | அவர்கள் தேவனுடைய ஊழியக்காரனாகிய மோசேயின் பாட்டையும் ஆட்டுக்குட்டியானவருடைய பாட்டையும் பாடி: சர்வவல்லமையுள்ள தேவனாகிய கர்த்தாவே, தேவரீருடைய கிரியைகள் மகத்துவமும் ஆச்சரியமுமானவைகள்; **பரிசுத்தவான்களின் ராஜாவே,** தேவரீருடைய வழிகள் நீதியும் சத்தியமுமானவைகள். | அவர்கள் கடவுளின் பணியாளரான மோசேயின் பாடலையும் ஆட்டுக்குட்டியின் பாடலையும் பாடிக் கொண்டிருந்தார்கள்; "கடவுளாகிய ஆண்டவரே, எல்லாம் வல்லவரே, உம் செயல்கள் பெரியன, வியப்புக்குரியன. **மக்களினங்களின் மன்னரே,** உம் வழிகள் நேரியவை, உண்மையுள்ளவை. |
| 289 | Rev. 16:5<br><br>REM and shalt be (refers to deity of Jesus) | அப்பொழுது தண்ணீர்களின் தூதன்: இருக்கிறவரும் இருந்தவரும் பரிசுத்தருமாகிய தேவரீர் **இப்படி நியாயந்தீர்க்க நீதியுள்ளவராயிருக்கிறீர்.** | நீர்நிலைகள் மீது அதிகாரம் கொண்டிருந்த வானதூதர் பின்வருமாறு சொல்லக் கேட்டேன்; "இருக்கின்றவரும் இருந்தவருமான தூயவரே, **இத்தீர்ப்புகளை வழங்கும் நீர் நீதியுள்ளவர்.** |
| 290 | Rev. 16:7<br><br>CHG And I heard another out of the altar say TO And I heard the altar respond | **பலிபீடத்திலிருந்து வேறொருவன்: ஆம், சர்வவல்லமையுள்ள தேவனாகிய கர்த்தாவே,** உம்முடைய நியாயத்தீர்ப்புகள் சத்தியமும் நீதியுமானவைகள் என்று சொல்லக்கேட்டேன். | **அப்பொழுது பலிபீடத்திலிருந்து நான் கேட்ட குரல்,** "ஆம், கடவுளாகிய ஆண்டவரே, எல்லாம் வல்லவரே, உம் தீர்ப்புகள் உண்மையுள்ளவை, நீதியானவை" என்றது. |

| 291 | Rev. 16:17<br><br>REM "of heaven" | ஏழாம் தூதன் தன் கலசத்திலுள்ளதை ஆகாயத்தில் ஊற்றினான்; **அப்பொழுது பரலோகத்தின் ஆலயத்திலுள்ள சிங்காசனத்திலிருந்து:** ஆயிற்று என்று சொல்லிய பெருஞ்சத்தம் பிறந்தது | ஏழாம் வானதூதர் தம் கிண்ணத்தில் இருந்ததை வான்வெளியில் ஊற்றினார். **அப்பொழுது கோவிலின் அரியணையிலிருந்து,** "எல்லாம் நிறைவேற்றப்பட்டாயிற்று" என்று ஒரு பெரும் குரல் ஒலித்தது. |
|---|---|---|---|
| 292 | Rev. 20:9<br><br>REM "from God out of" | அவர்கள் பூமியெங்கும் பரம்பி, பரிசுத்தவான்களுடைய பாளையத்தையும், பிரியமான நகரத்தையும் வளைந்துகொண்டார்கள்; **அப்பொழுது தேவனால் வானத்திலிருந்து அக்கினி இறங்கி** அவர்களைப் பட்சித்துப்போட்டது. | அவர்கள் மண்ணுலகெங்கும் பரவிச் சென்று, இறைமக்களின் பாசறையையும் கடவுளின் அன்புக்குரிய நகரையும் சூழ்ந்து கொண்டார்கள். **ஆனால், நெருப்பு வானத்திலிருந்து வந்து** அவர்களைச் சுட்டெரித்தது. |
| 293 | Rev. 20:12<br><br>CHG "God" TO "throne" | மரித்தோராகிய சிறியோரையும் பெரியோரையும் **தேவனுக்குமுன்பாக நிற்கக்கண்டேன்;** அப்பொழுது புஸ்தகங்கள் திறக்கப்பட்டன; **ஜீவபுஸ்தகம் என்னும் வேறொரு புஸ்தகமும் திறக்கப்பட்டது;** அப்பொழுது அந்தப் புஸ்தகங்களில் எழுதப்பட்டவைகளின்படியே மரித்தோர் தங்கள் தங்கள் **கிரியைகளுக்குத்தக்கதாக நியாயத்தீர்ப்படைந்தார்கள்.** | இறந்தோருள் சிறியோர், பெரியோர் ஆகிய அனைவரும் **அந்த அரியணைமுன் நிற்கக் கண்டேன்.** அப்பொழுது நூல்கள் திறந்து வைக்கப்பட்டன. **வேறொரு நூலும் திறந்து வைக்கப்பட்டது.** அது வாழ்வின் நூல். இறந்தோரின் செயல்கள் அந்நூல்களில் எழுதப்பட்டிருந்தன. அவற்றுக்கு ஏற்ப அவர்களுக்குத் தீர்ப்பு வழங்கப்பட்டது. |

| 294 | Rev. 20:13<br><br>REM hell | சமுத்திரம் தன்னிலுள்ள மரித்தோரை ஒப்புவித்தது; **மரணமும் பாதாளமும் தங்களிலுள்ள மரித்தோரை ஒப்புவித்தன.** யாவரும் தங்கள் தங்கள் கிரியைகளின்படியே நியாயத்தீர்ப்படைந்தார்கள். | பின்னர் கடல் தன்னகத்தே இருந்த இறந்தோரை வெளியேற்றியது. **அதுபோலச் சாவும், பாதாளமும் தம்மகத்தே இருந்த இறந்தோரை வெளியேற்றின.** அவர்கள் ஒவ்வொருவருக்கும் அவரவர் செயல்களுக்கு ஏற்பத் தீர்ப்பு வழங்கப்பட்டது. |
|---|---|---|---|
| 295 | Rev. 20:14<br><br>REM hell | அப்பொழுது மரணமும் பாதாளமும் அக்கினிக்கடலிலே தள்ளப்பட்டன. இது இரண்டாம் மரணம். | சாவும் பாதாளமும் நெருப்பு ஏரியில் எறியப்பட்டன. இந்த நெருப்பு ஏரியே இரண்டாம் சாவு. |
| 296 | Rev. 21:24<br><br>REM "of them which are saved" | **இரட்சிக்கப்படுகிற ஜனங்கள் அதின் வெளிச்சத்திலே நடப்பார்கள்.** பூமியின் ராஜாக்கள் தங்கள் மகிமையையும் கனத்தையும் அதற்குள்ளே கொண்டுவருவார்கள். | **மக்களினத்தார் அதன் ஒளியில் நடப்பர்;** மண்ணுலக அரசர்கள் தங்களுக்குப் பெருமை சேர்ப்பவற்றையெல்லாம் அங்குக் கொண்டு செல்வார்கள். |
| 297 | Rev. 22:14<br><br>CHG "do his commandments" TO "wash their robes" | **ஜீவவிருட்சத்தின்மேல்** அதிகாரமுள்ளவர்களாவதற்கும், வாசல்கள் வழியாய் நகரத்திற்குள் பிரவேசிப்பதற்கும் **அவருடைய கற்பனைகளின்படி செய்கிறவர்கள் பாக்கியவான்கள்.** | **"தங்கள் ஆடைகளைத் துவைத்துக் கொண்டோர் பேறுபெற்றோர். *வாழ்வு தரும் மரத்தின்மீது*** அவர்களுக்கு உரிமை உண்டு. அவர்கள் வாயில்கள் வழியாக நகருள் நுழைவார்கள். |
| 298 | Rev 22:19 | ஒருவன் இந்தத் தீர்க்கதரிசன புஸ்தகத்தின் | இந்த நூலில் உள்ள இறைவாக்குகளுள் எதையாவது |

|  | CHG ''Book of life'' to ''tree of life'' | வசனங்களிலிருந்து எதையாகிலும் எடுத்துப்போட்டால், **ஜீவபுஸ்தகத்திலிருந்தும்,** பரிசுத்த நகரத்திலிருந்தும், இந்தப் புஸ்தகத்தில் எழுதப்பட்டவைகளிலிருந்தும், அவனுடைய பங்கை தேவன் எடுத்துப்போடுவார். | யாரேனும் எடுத்து விட்டால், இந்த நூலில் எழுதப்பட்டுள்ள **வாழ்வு தரும் மரத்திலின்றும்** திருநகரினின்றும் அவர்களுக்குரிய பங்கைக் கடவுள் எடுத்துவிடுவார். |
|---|---|---|---|
| 299 | Rev. 22:21<br><br>REM Christ | நம்முடைய கர்த்தராகிய **இயேசுகிறிஸ்துவின்** கிருபை உங்கள் அனைவரோடுங்கூட இருப்பதாக. **ஆமென்.** | ஆண்டவராகிய **இயேசுவின்** அருள் அனைவரோடும் இருப்பதாக! |

| Differs from the King James Bible in the New Testament | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| o = Omitts | | | | a = Adds | | | |
| | NKJV | NIV | NASV | NRSV | RSV | NCV | LIV |
| WORDS | o 2289 | o 5219 | a 3561 | o 3890 | o 6985 | a 11114 | a 17003 |
| VERSES | 0 | o 16 | o 17 | o 18 | o 25 | o 16 | o 7 |

| The number of times 15 *Major* words differ from the King James Bible | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| o = Omits | a = Adds | | | * = Word is Completely Removed | | | |
| **WORD** | **NIV** | **NASV** | **NKJV** | **RSV** | **NRSV** | **NCV** | **LIV** |
| Christ | **o 25** | o 34 | **o 1** | **o 32** | o 87 | a 121 | a 44 |
| Lord | **o 352** | o 438 | **o 66** | **o 36** | o 91 | o 299 | o 2368 |
| Jesus | **a 292** | o 64 | **o 2** | **o 53** | a 16 | a 1098 | a 293 |
| God | **o 468** | o 87 | **o 51** | **o 111** | o 138 | a 803 | a 452 |
| Godhead | **o 3** * | o 3 * | **o 1** | **o 3** * | o 3 * | o 3 * | o 3 * |
| Lucifer | **o 1** * | o 1 * | | **o 1** * | o 1 * | o 1 * | |
| devil(s) | **o 80** | o 82 | **o 81** | **o 82** | o 80 | o 74 | o 87 |
| hell | **o 40** | o 41 | **o 22** | **o 41** | o 41 | o 39 | a 13 |
| heaven | **o 160** | o 127 | **o 50** | **o 83** | o 88 | o 186 | o 26 |
| damned (able, ation) | **o 15** * | o 15 * | **o 15** * | **o 15** * | o 15 * | o 15 * | o 7 |
| blood | **o 41** | o 39 | **o 23** | **o 26** | o 46 | o 157 | o 174 |
| salvation | **o 42** | o 4 | **o 2** | **o 33** | o 37 | o 94 | o 25 |
| Word of God | **o 8** | o 2 | **o 1** | **o 3** | o 8 | o 31 | o 27 |
| Word of the Lord | **o 25** | o 2 | **a 4** | **o 2** | o 3 | o 217 | o 236 |
| Lord Jesus Christ | **o 24** | o 21 | | **o 21** | o 22 | o 20 | o 15 |

***Nothing could be further from the Truth! The average reader would never know the difference!*** Most people believe the new versions are just "harmless" updating of words and made easier to understand.

**Now the serpent was more subtil than any beast of the field which the LORD God had made. And he said unto the woman, Yea, hath God said, Ye shall not eat of every tree of the garden?Genesis 3:1**